

வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்து வரும்
ஃ ஃ ஃ
வெற்றிமுகத்து வேலவனைத், தொழ
புத்தி மிகுத்து வரும்
ஃ ஃ ஃ
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத்
துள்ளி ஓடும் தொடர்ந்த வினைகளே
ஃ ஃ ஃ
அப்பம் முப்பழம் அமுது செய்தருளியே
தொப்பை அப்பனைத் தொழ வினையறுமே.

# ஸப்தகிரி

இதழ் 4 மலர் 16

தனிப்பிரதி/ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : வண்ண ஓவியத்தில் ஸ்ரீ கிருஷ்ணர்.
— கே. ஜெகதீஷ்

2-வது : திருமலை ஆனிவார ஆஸ்தானத்தின் போது பூப்பல்லக்கில் உற்சவர்.

3-வது : உடுப்பி ஸ்ரீகிருஷ்ணன் கோயில் மற்றும் திருத் தேர்.

பின்னட்டையில் : பஞ்சமுக விநாயகர்.

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.



# உங்களுடன்....

ஆஸ்திகப் போர்வையைப் போர்த்திக் கொண்டு தான் சார்ந்திருக்கும் சமயத்தைப் பற்றியும், தான் வாழும் சமுதாயத்தைப் பற்றியும் சிறிதும் நாட்டங்கொள்ளாது, உறக்கத்திலும் உண்டியிலுமே தன்னை மூழ்கடித்துக் கொண்டிருக்கும் நம்மில் பலரைவிட, நாஸ்திகனே பன்மடங்குமேல் என்று துணிந்து கூறலாம். தன் சமயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள அவன் இதற்கென்று ஒரு மாநாட்டையோ, பெருவிழாவோ எடுக்க வேண்டியதில்லை. வாய்ப்புக்கள் கிடைக்கின்றபோது அவன் தன்னையும், தன் சமயத்தையும் சிறிதளவு சிந்திக்க ஆரம்பித்தால் போதும். அதுவே அவன் தன் சமயத்திற்கு ஆற்றும் ஒரு தொண்டாக அமைந்திடும். இந்த வாய்ப்புக்களைக்கூட அவன் தேடிக் கொண்டு போக வேண்டியதில்லை. அவையே அவனை நாடி வருகின்றன. அவைதான் சமய விழாக்கள். நாளும் திருநாளெனினும், ஒரு சில குறிப்பிட்ட நாட்களை முக்கியமாகக் கருதி, அவற்றை கொண்டாட வழி வகுத்தனர் நமது முன்னோர். தனி ஒருவன் சமயத்தைப் பற்றி சிந்தித்தால் அதன் விளைப்பயனால் அவன் ஒரு யோகியாகலாம். அதனால் இந்நாட்டிற்கு ஏற்படும் நன்மையைவிட, பலர் ஒன்று கூடி சமயத்தைப் பற்றியும், சமய விழாக்களைப் பற்றியும் சிந்திக்கும்போது ஏற்படும் அன்பின் பிணைப்பு, ஒருமைப்பாட்டின் உயர்வு, ஆன்மீக உணர்வு ஆகியவற்றின் எண்ண அலைகள் ஒரு உன்னதமான சமுதாய மேம்பாட்டிற்கு இட்டுச் செல்லும். இவ்வகையில் எதிர்வரும் 'கிருஷ்ண ஜெயந்தி' அன்று கிருஷ்ணவதாரத்தின் மேன்மையினை அறிந்திடுதல் நலம் பல பயக்கும்.

''அவஜா நந்தி மாம்மூடா: மாநுஷீம் தனுமாச்ரிதம்'' என்று கண்ணனே கூறி வருந்திடும் நிலையில் அன்றைய துவாபரயுகத்து மாந்தர்கள் விளங்கிடும்போது இன்றைய கலியுகத்து மக்களைப்பற்றி கேட்கவா வேண்டும். மகாபாரதத்தில் தன் மேன்மையினையும், பாகவதத்தில் தன் நீர்மையினையும் காட்டவே, பரமபதத்தினை விட்டு பசுக்களை மேய வந்தான் கண்ணன். மகாபாரதத்தில், பின் நின்று தன் அவதார ரகசியத்தினைப் புரிய வைத்துள்ளான். வீரமும் சூழ்ச்சியும் வாழ்க்கையில் பெரும் பங்கு வகிக்கின்றன என்பதையும், அவற்றை அறநெறியில் பயன்படுத்தினால் ஓர் உயர்ந்த சமுதாயத்தினை உருவாக்கலாம் என்பதையும் பாரதம் கூறுகிறது. குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் பார்த்தனுக்கு எழுந்த கேள்விக்கும், குழப்பத்திற்கும் கிடைத்த பார்த்தசாரதியின் பதிலும் விளக்கமும் நமது வாழ்க்கைக் களத்தினை அமைதிக்களமாக மாற்றிடும் அமுதமாகும். கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றிடையே உள்ள இனிய தொடர்பை தன் உபதேசத்தால் தெளிவாக்குகிறான் மதுசூதனன். போருக்கு ஆயததமான நிலையில் இந்த கீதோபதேசம் நடந்திருக்குமா என்பது ஒரு கேள்வி. ஆனால் இந்த அறவுரைக்கு இதனைவிட சிறந்த இடமோ, சூழ்நிலையோ, கேட்கக்கூடிய நபரோ இருந்திருக்க முடியாது. அன்று போர்முனையில் திரும்பி ஓட எத்தனித்த உத்தரகுமாரனுக்கு, தேரோட்டியாக இருந்து போரின் தன்மையைப்பற்றி உரை நிகழ்த்திய அதே அர்ச்சுனனுக்கு, இந்த குருக்ஷேத்திரத்தில், போர் செய்ய துணியாது, வில்லை நழுவவிட்டபோது, தேரோட்டியான கண்ணனின் கீதை ஒரு சிறந்த போதனையாகும். இருசாராரும் போர் செய்ய நின்றாலும், அதனை ஆரம்பித்து வைக்கும் கட்டாயம் பாண்டவர்களுக்கேயன்றி கௌரவர்களுக்கு இல்லை. அதனால்தான், போர்க்கொடி உயர்த்தாது, போர்கருவி ஏந்தாது இருந்த அர்ச்சுனனை துரியோதனன் தாக்க முயற்சிக்கவில்லை. இப்போரினால் தன் பக்கம் ஏறபடும் உயிர்ச் சேதத்தினையும், பொருட் சேதத்தினையும் அறிந்தே வாளா இருந்தான் துரியோதனன். அப்போதுதான் கீதை உபதேசிக்கப்பட்டது.

இதற்கு நேர்மாறாக கண்ணன் முன்நின்று நடத்திய அவதார ரகசியங்கள் அடங்கியது பாகவதத்தின் ஸ்ரீ கிருஷ்ணவதாரக் காட்சிகள். வேதம், உபநிஷத்துக்கள், புராணங்கள், இதிஹாஸங்கள் ஆகியவற்றில் காட்டிலும், பக்தியானது ஆழமாக, அதிகமாக பாகவதத்தில் ஊட்டப்பட்டுள்ளது. தன் பரத்துவத்தையும், பரமாத்மா-ஜீவாத்மா உறவினையும், எளிமையான பக்தியின் சிறப்பினையும் வெளிப்படுத்தியவன் இப்பாகவத நாயகன். இன்னும் கூறப்போனால் வேதம், புராணங்கள் கூறும் தத்துவ விளக்க குழப்பங்களைத் தீர்க்கும் வகையில் தன் அவதார எளிமை கொண்டு, எளிமையான பக்தி ஒன்றே தன்னை அடைய ஒரே வழி என்று கூறி, சாதி வெறிக்கும், சமய வெறிக்கும் அன்றே ஒரு முதற்போர்க் கொடியினை உயர்த்தினான் தன் இடைக்குலப் பிறப்பினால். ஏழ்மையும், அறியாமையும் கூட பக்திப் பாதைக்கு இட்டுச் செல்லும் முதற்படிக்கட்டுக்கள் என்பதும், செய்தொழிலால் மட்டுமே ஒருவனின் பிறப்பு மதிப்பிடப்படுகிறது என்பதும் பாகவதம் நமக்குக் கூறும் செய்திகளாகும்.

மேற்கூறிய செய்திகள் யாவும் கிருஷ்ணவதாரத்தின் பெருமையினை மேலோட்டமாக பார்த்தாலேயே அறியப்படும். ஆனால், பாகவதத்தினையும், பாரதத்தினையும் சீரிய சிந்தனையோடு பார்த்தாமேயானால் அது, உண்மையிலேயே ஒரு ஆக்கப்பூர்வமான சமுதாய-சமயப் புரட்சிக்கு வித்திடும் ஒரு பக்தி இயக்கம் என்பதை அறிந்தின்புறலாம்.

# செய்திச் சுருக்கம்

## 'ஸிட்னி' கோயில் கும்பாபிஷேகம் :

ஆஸ்திரேலியாவில் உள்ள இந்துக் கோயில் குழுவின் சார்பில் 'ஸிட்னி' யில் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் கும்பாபிஷேகம் இந்து வைதிக சடங்குகளின்படி, சமய நிகழ்ச்சிகளுடன் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவிற்கு திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர். திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்கள் சிறப்பு விருந்தினராக மேலாண்மையின் சார்பில் பங்கேற்றார். 'அயல் நாட்டு இந்துக் கோயில்களுக்கு நிதி உதவி' எனும் தேவஸ்தான நிதி உதவி திட்டத்தின் கீழ், மேற்படி கோயில் நிதி உதவி பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## திருமலையில் முக்கிய பிரமுகர்கள் :

அண்மையில் திருமலைக்கு ஆந்திர மாநில ஆளுநர் திரு. சங்கர் தயாள் சர்மா, தமிழ்நாடு ஆளுநர் திரு. குரானா ஆகியோர் தம் குடும்பத்தாருடன் வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர். ஆந்திர அரசு தலைமைச் செயலர் திரு. ஸ்ரவண் குமார் அவர்கள் கால் நடையாக திருமலைக்கு வருகை புரிந்தார். பின்னர் திருமலையில் இரண்டு புதிய விருந்தினர் விடுதி கட்டடங்களுக்காகச் செய்யப்பட்ட பூமி பூஜையில் பங்கேற்றார். இந்திய தலைமை நீதிபதி திரு. பி. என். பகவதி அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார். நேபாள் அரசு தலைமை ராணுவ தளபதி திரு. அர்ஜுன் சிங் ராணா, இந்திய உள்துறை அமைச்சர் திரு. எஸ். பி. சவான், இந்திய மின்னியக்கத் துறை உள்ளாட்டு அமைச்சர். திரு. சிவராஜ் பாட்டீல், ஆந்திர மாநில கிராம மேம்பாட்டுத் துறை அமைச்சர் திரு. ராஜாமணி, வனத் துறை அமைச்சர். திரு. மஹிபால் ரெட்டி, தொழிற் கல்வி அமைச்சர். திரு. அய்யன்ன பாத்ருடு, ஒன்றியத் துறை அமைச்சர் திரு. கர்ணம் ராம சந்திர ராவ், அறநிலையத் துறை அமைச்சர் திரு. எத்திராஜராவ் மற்றும் பலரும் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர்.

## நாட்டிய நிகழ்ச்சி :

அண்மையில் திருப்பதி இந்திய பாலே தியேட்டரின் சார்பில் ஸ்ரீ அன்னமாச்சார்யா நாட்டிய நிகழ்ச்சி ஒன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்குச் சித்தூர் மாவட்ட காவல் கண்காணிப்பாளர் திரு. ஆர். சீதா ராமராவ் அவர்கள் தலைமை வகிக்க, சிறப்பு விருந்தினராக பங்கேற்ற தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்கள், மேற்படி குழுவினரின் அன்னமாச்சார்யா நாட்டியக் கிளை எனும் துறையினைத் திறந்து வைத்தார். இது போது புலிகண்டி கிருஷ்ணா ரெட்டி (பத்திரிகையாளர்) மற்றும் காமிசெட்டி ஸ்ரீநிவாசலு செட்டி ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர்.

## திருமலை.

அயல்நாடுகளில் சில நகரங்களைப் போன்று அதாவது சிங்கப்பூரைப் போன்று, திருமலையினையும் ஒரு சுத்தமான, ஆரோக்யமான அழகுமிக்க நகரமாகமாற்றுவதற்கு தேவஸ்தான மேலாண்மை அண்மைக் காலமாக பல திட்டங்களையும் முயற்சிகளையும் மேற்கொண்டு வருகிறது. இதன் தொடர்பாக, திருமலையில் வசிக்கும் உள்ளூர் மக்களுக்குத் திருப்பதியில் அல்லது திருப்பதிக்கு அடுத்துள்ள மங்கலத்தில் இல்வசமனை

தர மேலாண்மைக் குழு முடிவு செய்துள்ளது.

## தங்கச் செருப்பு :

அண்மையில் திருமலையில் கோயில் உண்டியலில் 396 கிராம் எடையுள்ள கற்கள் பதித்த தங்கச் செருப்பு ஒன்று பக்தர் ஒருவரால் போடப்பட்டுள்ளது. இத்தங்கச் செருப்பினை, கோயிலில் நடைபெறும் முக்கிய உற்சவ சமயங்களின்போது பயன்படுத்துவதென்று மேலாண்மை தீர்மானித்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் திங்கட்கிழமை அன்று நடத்தப்படும் தெப்போற்சவம் எனும் ஆர்ஜித சேவையின் கட்டணம் ரூ. 2500/- லிருந்து ரூ. 5000 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. பவித்ரோற்சவம் எனும் ஆர்ஜித சேவையின் கட்டணமும் ரூ. 2000/- லிருந்து ரூ 5000/-ஆக உயர்த்தப்பட்டுள்ளது. மூன்று நாட்கள் நடைபெறும் இப் பவித்ரோற்சவத்தின்போது கிருஹஸ்தர் சம்பந்தப்பட்ட 5 நபர்கள் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர். மேலும் முதல் நாள் தோமாலை சேவைக்கு இரண்டு பேர்களும், இரண்டாம் நாள் நடைபெறும் அர்ச்சனைக்கு இரண்டு நபர்களும், மூன்றும் நாள் நடைபெறும் ஏகாந்த சேவைக்கு இரண்டு நபர்களும் அனுமதிக்கப் படுவர்.

மேற்கு ஜெர்மனியிலிருந்து இலவசமாக 500 உயர் கலப்பு இன கறவை மாடுகளை தி. தி. தேவஸ்தானம் விரைவில் பெற்றுக்கொள்ளும்.



# பெரியநம்பிகள் திருப்பணியும் திருப்பள்ளியும்

ஓங்கு தனுர்க் கேட்டை தனில் உதித்து, ஆளவந்தார் தாளிணை அடைந்து, எம்பெருமானுர் முனிவர்க்கு இதம் உரைத்து, மாறனேர் நம்பிக்கு வாழ்வளித்து, வைணவம் வாழ தன் கண்களையும் இன்னுயிரையும் ஈந்த தியாகச் செம்மலான பெரிய நம்பிகளை வைணவ உலகம் மறக்க முடியுமா?

திருவரங்கத்தில் அவதரித்தப் பெரிய நம்பிகள் நாதமுனிகளது பேரரும், வைணவ சமயம் தழைத்தோங்கச் செய்தவரும் ஆகிய ஆளவந்தாரின் 23 சீடர்களுள்ளும் இவரே தலைமைச் சீடர்.

தன் ஆசார்யன் அன்பு கட்டளைப் படி மேல் குலத்துதித்த பெரிய நம்பிகள், அரிசன வகுப்பைச் சேர்ந்த மாறனேர் நம்பிகளுக்கு இயன்ற தொண்டு புரிந்து வாழ்ந்தவர். அவர் திருநாடலங்கரித்ததும் பிரம்மமேத முறைப்படி சரமக்கிரியைகள் செய்தவர். பள்ளிப்படுத்தியதும், நீராடாது திருமாளிகைத் திரும்பி, பெருமாளுக்குத் திருவமுது செய்வித்துத் தாமும் அமுது செய்கிறுர். 'வர்ணாச்ரம தர்மம் என்பது வாழ்க்கை நெறியல்லாது வழியில் கிடக்கும் முள் வேலியல்ல என 800 ஆண்டுகளுக்கு முன் உலகுக்கு உணர்த்தியவர்.

திருவரங்கத்தில் ஆளவந்தார் திருநாடலங்கரித்ததும், வைணவ உலகுக்கு வழிகாட்டிட, தலைமை ஏற்றிட இளையாழ்வாரை அழைக்கச் சென்றவர், மதுராந்தகம் ஏரிகாத்த இராமன் கோயில் திருமுன் அவரைக் கண்டு, அவரது வேண்டுகோளின்படியும், கச்சிப் பேரருளாளன் திருவுள்ளக் குறிப்பின்படியும் உடையவரின் ஞான குருவாய் இருந்து பஞ்ச சம்ஸ்காரங்களையும் செய்வித்தவர் நம் பெரிய நம்பிகள்.

அத்திகிரி வரதனிடம் அளவளாவும் பேறும், பேரருளாளையும் பெருந்தேவித் தாயாரையும் நேருக்கு நேர் விபவ வடிவில் கண்டவரும், வரதனே தனக்குக் குடை பிடித்துச் செல்லும் பேறு பெற்றவரும் ஆகிய திருக்கச்சி நம்பிகள் அவ்வரதனின் ஆணையின் படி பெரிய நம்பிகளிடம் மாட்டுக் காரனாக இருந்து தொண்டு செய்தார் எனில் பெரிய நம்பிகளின் பெருமையை உரைக்க வார்த்தைகள் ஏது?

இவற்றுல் மட்டுமல்லாது, தள்ளாத வயதில் தளராத நெஞ்சுறுதியுடன் மன்னனையே எதிர்த்துத் தன் கண்களையும், ஈந்து உயிர்த் தியாகம் செய்த தன் செயற்கரும் செயலால் யாவரினும் உயர்ந்து நிற்பவர் பெரிய நம்பிகள். அந்த வரலாறு...

இவர் காலத்தில் சோழ தேசத்தை இரண்டாம் குலோத்துங்கன் என்ற மன்னன் ஆண்டு வருகிறுன். இம் மன்னன் சைவத்தில் ஊக்கமுடையவன். மேலும் அரசியல் காரணமாகவும் இம்மன்னனது பகைமைக்கு உடையவர் இராமானுஜர் ஆளாகின்றுர். மன்னவன், வைணவர்களை நிர்பந்தித்து, 'சிவாத்பரம் நாஸ்தி' (சிவனினும் மேலான தெய்வமில்லை) என எழுதிய ஓலை நறுக்குகளில் கையொப்பம் இடச் செய்கிறுன். இம்மன்னனது அமைச்சன் நாலூரான். இவன் "சாமான்யராகிய இவர்கள் கையெழுத்திட்டால் பயன் யாது? இராமானுஜர் இட்டால் அன்றே சம்மதமாகும்'' என போதனை செய்கிறுன்.

அரசாணைப் பிறக்கிறது. இராமானுஜரை அழைத்து வர இராஜ சேவகர்கள் திருவரங்கம் விரைகின்றனர். அவரது திருமாளிகையை அடைந்து இராமானுஜரைத் தேடுகின்றனர்.

அரசாணையை கூரத்தாழ்வான் அறிகின்றுர். இவர் குறுநில மன்னனுயினும் உடையவரின் அன்பிற்கினிய சீடனுவர் நிலைமையின் கடுமையையும், இராமானுஜரை ஆபத்து சூழ்ந்திருப்பதை உணர்கிறுர். பெரிய நம்பிகள் உட்பட திருமாளிகையில் உள்ளோருடன் ஆலோசனை கலக்கிறுர்.

கூரத்தாழ்வான் காவி தரித்து, திரிதண்டம் ஏந்தி தாமே இராமானுஜன் என, இராஜ சேவகர்களிடம் தன்னை ஒப்புவிக்கிறுர்.

105 வயது தொண்டு கிழவர் பெரிய நம்பிகள் இதனைக் காண்கிறுர்.

---

திரு. ந. செல்வராஜ் எம். ஏ.,
தஞ்சாவூர்.

---

ஆழ்வானுக்கு ஏது நேருமோ என அஞ்சி தன் மகள் அத்துழாயுடன் அவரைப்பின் தொடர்கிறுர். இராமானுஜர் தன் ஆசார்யன் அறிவுரைப் படி மேல் திசை நாட்டுக்கு எழுந்தருளுகின்றுர்.

திருவரங்கத்தினின்றும் புறப்பட்டவர்கள், முடிகொண்ட சோழபுரம் எனப்பட்ட பழையாறைப் பழம் பதியின் கண் அமைந்த சோழன் மாளிகையை அடைகின்றனர். (இன்று கும்பகோணத்திற்கு தென் மேற்கில் நந்திபுர விண்ணகரை அடுத்து பழையாறையும் சோழன் மாளிகை என்ற ஊரும் உள்ளன). உருவ ஒற்றுமையால் கூரத்தாழ்வானே ஸ்ரீராமானுஜர் என சோழன் எண்ணி, அவரிடம் சினந்து சீறுகிறுன். சிங்காதனத்தின் சீறல்களுக்கு இளஞ்சிங்கம் ஆழ்வான் சிறிதும் அஞ்சினுரில்லை. ஹரியின்

துணை கொண்டான் சிறு நரியின் சல சலப்புக்கு அஞ்சுவாரா?

''சிவாத்பரம் நாஸ்தி'' என எழுதி கையொப்பம் இட வேந்தன் ஆணை யிடுகிருன். 'ஸ்ரீமந் நாராயணனே பரன்' என ஆழ்வானும், பெரிய நம்பிகளும் வாதிடுகின்றனர். பிடி வாதம் கொண்ட மன்னனிடம் இவர் களது எதிர்வாதம் எடுபடவில்லை. இறுதியில் ''த்ரோணம் அஸ்தி தத: பரம்'' (குறுணியிலும் முக்குறுணி பெரியது) என எழுதி கையொப்பம் இடுகிருர்கள். 'சிவம்' என்ருல் 'குறுணி' என்ற பொருள் உண்டு. சிவத்தைவிட - 'த்ரோணம்' - முக்கு ணிறு பெரியது என இருபொருள்பட எழுதியதைக் கண்டு தான் வழிபடும் ஈசனை கேலி செய்தது பொறுக்கா மல் வேந்தன் வெகுண்டெழுகிருன்.

''திருமண்ணின் திமிர் அடக்கு கிறேன். மறந்தும் புறந்தொழா மாந் தரே, என்னை எதிர்த்த நீவிர் இனி இருந்தும் பயன் யாது?'' என வஞ்சி னம் உரைத்த மன்னன் ஆழ்வானது கண்களிரண்டையும் கீண்டு எறிய ஆணையிடுகிருன். ஆனல் ஆழ்வானே, ''நாம் இருந்தி பயன் யாது என வினவிய மதம் கொண்ட மன்ன, நீ இதற்கு வருந்தும் காலம் வரத்தான் போகிறது. திருவரங்கத்திற்கு, எதிர் அரங்கம் அமைத்த உன்னைக் கண்ட இக்கண்கள் இனி இருந்து ஆவதொன் றில்லை''. என கர்ஜித்த இளம் சிங் கம், தன் கை நகங்களிளுலேயே தன் கண்கள் இரண்டையும் கீண்டு சிங் காதனத்தின்மேல் வீசி எறிகிருன்.

''மாதவனுக்கு ஆட்பட்டு சேவை செய்யும் நெஞ்சம், ஆதவ குலத் துதித்த அரசனின் ஆணைக்கு அஞ் சாது'' என விழிகளில் அனல் கக்கப் பேசிய பெரிய நம்பியின் கண்கள் இரண்டும் கீண்டு எடுக்கப்படுகின் றன.

வைணவத்தின் வரலாறு இருவரது கண்களிலிருந்து பொங்கிப் பெருகிய செங்குருதியினல் எழுதப்படுகிறது சோழர் வரலாற்றிலும் கறை படி கிறது.

அரசனின் கோபத்துள்ளான வர்க்கு யார்தான் உதவுவார்? கண் ணிழந்த இருவரும் அத்துழாய் அம் மாள் வழிகாட்ட, பழையாறையி லிருந்து திருவரங்கம் செல்லும் பெரு வழியில் தம் பயணத்தை தொடர்கின்றனர்.

கள்ளர் பசுபதி கோயில் என்னு சிற்றூரை அடைகின்றனர். அ கிருந்த வைணவ அடியார்களாகி வேங்கிராயர்கள் உதவியுடன் ஒ கொல்லைக் காட்டிலே இளைப்பாறு கின்றனர்.

தம் 105 ஆண்டு நெடும் பயணப் முடிந்து பெரும் பயணம் புறப்படும் நாள் நெருங்குவதை உணர்கிருர். ''ஆசார்யனுலே அங்கீகரிக்கப்பட்ட வனுக்கு பரமபதம் நிச்சயம். ஆகை யால் இத்திருமேனியை விடுதற்கு அரங்கம்தான் செல்ல வேண்டும் என்று கருத வேண்டாம்'' என கூரத் தாழ்வானுக்கு ஆறுதல் மொழிந்து, அக்கொல்லைக் காட்டிலே ஆழ்வான் மடியில் திருமுடியும், அத்துழாய் மடியில் திருவடியும் வைத்து, ''பாக வதர் மடியைக் காட்டிலும் மகிமை மிக்கதா திருவரங்கம்'' என எண்ணி திருநாடலங்கரித்து விடுகிருர்

அவ்விடத்து பிராமண பிரேதம் சம்ஸ்காரம் பண்ணுவார்கள் இல்லா மையால் ஸ்ரீ பராந்தகபுரம் எனும் ஊரில் இருந்து - (இவ்வூர் சுவாமி மலையை அடுத்து இன்று தனியூர் என்று அழைக்கப்படுகிறது. தஞ்சைக் கல்வெட்டுக்களில் தனியூராகிய ஸ்ரீ பராந்தகபுரம் எனக் காணப்படு கிறது). ஸ்ரீ வைஷ்ணவர்களை அழைத்து அங்கேயே திருப்பள்ளிப் படுத்துகின்றனர்.

திருநாராயணபுரத்திருந்த ஸ்ரீ ராமானுஜர் பெரிய நம்பிகளுக்கு நேரிட்டதைக் கேள்விப்பட்டு ''கண் போச்சுதே, கண் போச்சுதே'' எனக் கதறி, தம் ஆசார்யனன பெரிய நம்பிகளுக்கு, ஞான புத்திரன் என்ற ஸ்தானத்தில் இருந்து, ஸ்ரீ சூர்ண பரிபாலனமும், திருவத்யயனமும் செய்தருளுகிருர்.

நம் தரிசனம் (சமயம்) காக்கத் தன் தரிசனம் (கண்கள்) இழந்து தன்னுயிரையும் தியாகம் செய்த



**வேந்தன்பட்டி ஸ்ரீ மீனுட்சி சொக்கலிங்கேசுவரர் திருக்கோயில்,**
**திரு. வி. முத்துராமன் - கோவை.**

ஸ்ரீ பெரிய நம்பிகள் பள்ளிப்படுத்தப் பட்ட இடம் இன்னும் கள்ளர் பசுபதி கோயிலில் உள்ளது. இவ்வூர் தஞ்சை கும்பகோணம பஸ் மார்கத்திலும், புகை வண்டி மார்க்கத்திலும் உள்ளது. பஸ் நிற்குமிடத்திற்கு அருகிலும், புகை வண்டி நிலையத்தினின்று 1 கி.மீ. தொலைவிலும் இப் பள்ளி உள்ளது.

பாழடைந்துக் கிடக்கும் இதனை ஊரார் ஒட்டைக் கோவில் என்கின்றனர். பசுமையான வயல்களின் நடுவில் தென்னஞ்சோலையின் நடுவில் வரதராதப் பெருமான் ஆலயம் உள்ளது. அதற்கு தென்கிழக்கில் பெரிய நம்பிகள் திருப்பள்ளி உள்ளது. இடிந்த மண்டபத்தில் பள்ளிகொண்ட பெருமானைப் பாடி நெஞ்சில் கொண்டவர் பள்ளி உள்ளது.

இவ்வூருக்கு அருகாமையில் உள்ள அய்யம்பேட்டை, தியாக பிரம்மத்தின் பிரதம சீடர் வேங்கட ரமண பாகவதரின் அவதாரஸ்தலம். இவ்வூரில் ஸ்ரீ வைஷ்ணவர்களான சௌராஷ்டிரர்களும், பட்டு சாலியர்களும் மிகுதி. இப்பட்டு சாலிய மகாஜன சபையினரே இத்திருப் பள்ளியை பரிபாலித்து வருகின்றனர். இம்மகானின் அவதார நட்சத்திரமான மார்கழி கேட்டையில் விரிவாகவும், ஏனைய மாதக் கேட்டைகளிலும் இத்திருப்பள்ளிக்கு அபிஷேக ஆராதனைகளும் திவ்ய பிரபந்த சேவைகளும், ததியாராதனமும் நடைபெறுகின்றன.

ஆளவந்தாரின் அபிமான சீடரும், உடையவரின் ஞான குருவுமான பெரிய நம்பிகளது திருப்பள்ளியும், அடுத்துள்ள வரதராஜப் பெருமானது கோயிலையும் காண்பவருக்குக் கண்ணீர் ஊற்றெடுக்கத்தான் செய்யும். சுற்று மதில்கள் இடிந்து, முற்று பெறாத விமானமும், திருப் பள்ளி மண்டபமாக நற்கும் இவ்விடத்தைத் திருப்பணி செய்ய, பட்டு சாலிய மகாஜன சபையினர் ஏங்கு - கிடக்கின்றனர். பட்டு நெசவில் தன் வயிற்றுப் பாட்டினைத் தேடும் அம்மக்கள் பெருந் தொகைக்கு எங்கே போவார்கள்?

கோடி கோடியாய்க் கொட்டி கோபுரங்கள் எழுப்பிடும் வள்ளல்கள், இப்பரம பாகவதரின் திருப் பள்ளிக்குத் திருப்பணி செய்திடக் கூடாதா?

பொருளிருந்தால் புனிதனின் திருப் பள்ளி புண்ணிய க்ஷேத்திரமாக மாறிவிடும். திருவுளம் பற்றும் தொண்டுள்ளங்களும், ஸ்தாபனங்களும் காரியதரிசி, பட்டு சாலிய மகாஜன சபை, ஸ்ரீ பெரிய நம்பிகள் திருப் பள்ளி திருப்பணிக்குழு, அய்யம் பேட்டை-614201. தஞ்சாவூர் மாவட்டம் என்ற முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.





சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்னால் திருமலை பிரம்மோற்சவத்தின்போது திவ்விய பிரபந்த கோஷ்டியினர்.

# ★ திருமாலின் திருவடிகளின் மகிமை ★

## வாமனாவதாரம்:

வாமனாவதாரத்தில் திருமால், பலிச் சக்ரவர்த்தியின் மமதையும், அகங்காரத்தையும் அடக்கி வாமனராக அவதாரம் செய்து தர்மத்தை நிலைநாட்டினார். வாமனர் தனது கால்களால் மூன்று அடிகள் பூமி வேண்டுமென்று யாசிக்க, இல்லையென்று என்றுமே கூறாத பலிச் சக்ரவர்த்தியும் கொடுக்க, அவர் விஸ்வரூபங்கொண்டு கால்களால் பூமியை ஒரு அடியாகவும், ஆகாயத்தை இரண்டாவது அடியாகவும், "மூன்றாவது அடிக்கு இடம் எங்கே" என்று கேட்க, வெட்கமுற்ற பலி தனது அகங்காரம் அழியும் நிலைக்கு வந்து விட்டதென்று அறிந்து கொண்டு குனிந்து தனது தலையைக் காட்டினான். வாமனர் தனது கால்களை அவனது தலைமீது வைத்து அவனை பாதாள உலகத்திற்கு அனுப்பி வைத்தார். தர்மத்தையும் நிலைநாட்டி [illegible]துக்களையும் காப்பாற்றினார்.

திருமாலின் திருவடிகளின் மகிமையை என்னவென்று உரைப்பது!

## இராமாவதாரம்:

தசரதசக்ரவர்த்தியின் திருமகனாய் பிறந்து விஸ்வாமித்திரர் யாசித்துப் பெற்ற ஸ்ரீராமனையும் லக்ஷ்மணனையும் தனது வேள்வி காக்கஅழைத்துச் சென்றார். தாடகை என்ற அரக்கியையும், தாரகாசூரன் என்ற பலம் பொருந்திய அரக்கனையும், இன்னும் பல அசுரர்களையும் விளையாட்டு போல் அரச இளைஞர்கள் சம்ஹாரம் செய்தனர். விஸ்வாமித்திரர் தனது வேள்வியைச் சிறப்புடன் முடித்துக் கொண்டு ஜனகமகாராஜன் நடத்தும் சுயம்வர மண்டபத்திற்குச் செல்லும் வழியில் கிடந்த ஒரு கல் ஸ்ரீராமனது பாதம் பட்டவுடன் ஒரு பெண்மணியாக மாறியது. கௌதமருடைய மனைவி தன்னையும் அறியாமல் செய்த பாவத்திற்காக அவரால் கல்லாகச் சபிக்கப்பட்டாள். இப்பொழுது அவளுக்கு சாப விமோசனம் ஏற்பட்டு விட்டது. அந்த மகா பதிவிரதை இராமனையும் லக்ஷ்மணனையும் வாயார வாழ்த்து மாலைகளைத் தொடுத்து ஆசீர்வதித்தாள். ஸ்ரீராமனின் காலின் சிறப்பையும் மகிமையையும் அங்கு விஸ்வாமித்திரர் வாயிலாகக் கம்பர் தனது பின்வரும் கவியில் வெகு நயமாகக் கூறுகின்றார்.

"இவ்வண்ண நிகழ்ந்த வண்ணமினி
யிந்த வுலகுக்கெல்லாம்
உய்வண்ணமின்றி மற்றோர் துயர்
வண்ண முறுவதுண்டோ
மைவண்ணத் தரக்கி போரின் மழை
வண்ணத் தண்ணலே யுன்
கைவண்ண மங்குகண்டேன், கால்
வண்ண மிங்குக் கண்டேன்"
(பால-அகலிகைப் படலம்)

கிருஷ்ணாவதாரத்தில் விஸ்வாமித்திரர் ஸ்ரீராமாவதாரத்தில் கண்ட கைவண்ணம் பல இடங்களில் கால் வண்ணமாக பிரகாசித்துவிட்டது. துஷ்டனான கம்சனால் ஏவப்பட்டுப் பால கண்ணனைக் கொல்லவந்த சகடாசூரனை, தனது திருவடிகளால் உதைக்க, அந்த சக்ரரூபமாக வந்த சகடாசூரன் பலகாத தூரம் உருண்டுக்கொண்டே சென்று மடிந்தான்.

மகா கொடிய விஷத்தை கக்கி மக்களையும், இதர ஜீவராசிகளையும் வதைத்து வந்த காளிங்கராயன் என்ற கொடிய நாகராஜனின் பலத்தை கண்ணன் ஒடுக்குகிறான். அதன் தலைமீது ஏறி நின்றுகொண்டு தன் கால்களால் நர்த்தனம் செய்து அதன் இறுமாப்பையும், கொடிய பாபச் செயல்களையும் கண்ணன் களைந்தான்.

துரியோதனிடம் கண்ணன் தானே கால்களால் நடந்து தூது சென்று கடைசி வரையில் வாதாடி துரியோதனன் ஐந்து கிராமங்கள் கூடத் தர மாட்டேன் என்று கூறிய மறுப்பை ஏற்றுக் கொண்டு அங்கேயே யுத்தப் பிரகடனம் செய்து திரும்பினான்.

தன்னுடைய தம்பிகளையும், ஆசார்யனையும், பிதா மஹானையும், பேரப் பிள்ளைகளையும் யுத்தக்களத்தில் கண்ட அர்ச்சுனன், யுத்தம் செய்ய வேண்டாமென்றும், தன்னுடைய பந்து மித்திரர்களை யுத்தகளத்தில் கொல்ல மனமில்லையென்ற மயக்கம் வந்து சூழ்ந்து கொண்டு விட்டதென்றும் கூறி தன்னுடைய வில்லை, கீழே நழுவவிட்டபொழுது பகவான் அவனுக்கு சாரதியாக இருந்த நிலைமையிலேயே, பார்த்தனுக்கு கடமையைப்பற்றி உபதேசம் செய்தான். தேரில் தனது கால்களால் நின்று கொண்டே கீதையை வழங்கினான் பார்த்தன் பிறகு மயக்கம் தெளிந்து கண்ணன் உரைத்த தத்துவங்களுக்கு இணைந்து, போரில் இறங்கினான்.

திருமாலின் திருவடிகளின் மகிமை தான் என்னே!

திருமலையில் பல நூறு ஆண்டுகளாக ஸ்ரீனிவாசப் பெருமான் தனது திருவடிகளால் நின்று கொண்டே தன்னை நாடிவரும் கோடான கோடி மக்கள் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொண்டு, அவர்களது துயர்களைக் களைந்து கொண்டிருக்கும் காட்சி தான் என்னே!

இன்னும் எத்தனையோ மகிமைகளைச் செய்திருக்கும் திருமாலின் திருவடிகளை நாமும் போற்றி பணிந்து அவரது திருவருளைப் பெறுவோமாக!

**திரு. எம். கே. சீனிவாசன் பி.ஏ,**
**சென்னை.**



# அத்வைதம்-ஓர் விஞ்ஞான நோக்கு

பாரத நாட்டில் இன்றைக்குச் சுமார் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே வேதங்கள் புழக்கத்திலிருக்கின்றன. அதாவது அதற்கு முன்னாலேயே பல வருடங்களுக்கு முன்னால் அவைகள் தோன்றியிருக்க வேண்டும். இந்த வேதங்கள்தான் 'ஸநாதன தர்மம்' என்கிற இந்து மதத்தின் ஆணிவேர்களாக உள்ளன. இவைகள் மனித வாழ்க்கையின் முழு முதற் பயனைக் கோடி காட்டுகின்றதோடு சமூக நெறி, அரசியல் நெறி, விஞ்ஞானம், மருத்துவம், ரஸவாதம், மாந்த்ரீகம் எல்லாவற்றையுமே உள்ளடக்கியவையாய் இருக்கின்றன. இவைகள்தான் உலகில் மிகப் பழமையான இலக்கியங்களாகும்.

வேத காலத்திற்குப் பிறகு வேதங்களுக்கு எவ்வளவோ விளக்க உரைகள் எழுதப்பட்டிருந்தாலும் 'பிரம்ம சூத்திரம்' என்கிற நூல்தான் ஸநாதன தர்மத்தின் அடிப்படை நூலாகச் சொல்ல வேண்டும். இந்த நூலை வாதநாராயணர் என்பவர் எழுதியிருக்கிறார். மனித வாழ்வியலையும், ஆன்மா, ஆதிபரம்பொருள் இவற்றைப் பற்றியும் வேதங்களில் சொல்லப்பட்ட கருத்துக்களையும் விளக்கி எழுதினார். இதற்குப் பல நூறு ஆண்டுகளுக்குப் பிறகு மகாபாரத காலத்தில் வேத வியாசர் பகவத் கீதையைத் தன் காவியத்தில் சேர்த்தார். இந்த பகவத் கீதை மிகச் சிறப்பான முறையில் ஸநாதன தர்மத்தை விளக்குகிறது. ஆகவேதான் பிரம்ம சூத்திரம், பகவத் கீதை ஆகிய இரண்டு நூல்களுக்கும் ஆதி சங்கரர் மிகச் சிறப்பான விளக்க நூல்களை எழுதி 'அத்வைதம்' என்கிற தன் புதிய சித்தாந்தத்தை எழுதினார்.

உலகமும், இதிலுள்ள பொருள்களும், கிரகங்களும், கோடானு கோடி விண்மீன்களாகிற சூரியன்களும் ஒரு மாபெரும் இயக்கத்தில் ஈடுபட்டிருக்கின்றன என்றும், இவை எல்லாவற்றையும் இயக்கி இம்மி பிசகாமல் ஆட்டுவிக்கிற உருவமில்லாத அருவமாய் நிற்கிற இறைவன் ஒருவனே, அந்த இறைவனாகிற பிரம்மம் ஒன்றே உண்மை என்கிற கருத்தை (सत् एकमेव । अद्वितीयं ब्रह्म) வலியுறுத்துகிறார் ஆதிசங்கரர். அந்த இயங்கு சக்தி (பிரகிருதி) எல்லாப் பொருட்களிலும், அங்கிங்கெனாதபடி எல்லாவற்றிலும் உட்புகுந்து, வியாபித்து விரவி நின்று கடவுதலைச் செய்வதால் (கடவுள்) அந்தச் சக்தியை உருவகப்படுத்தி அந்த இறைவனை நான்கு விதமாகச் சொல்கிறார். उभयमानात् என்கிற உபநிஷத் வாக்கின்படி 'தோற்றம், ஒடுக்கம்' ஆகிய இரண்டு நிலைகளில் இறைவனை அவர் உருவகப்படுத்துகிறார். இறைவனின் நான்கு நிலைகளாவன. 1. அவன் விசுவாதிகன். உலகில் உள்ள எல்லாப் பொருட்களிலும் உட்புகுந்து கடந்து நிற்கிறான் என்பதாலும், நம் அறிவுக்கு எட்டாதவனாக அவன் இருப்பதாலும், அவன் 'விசுவாதிகன்' ஆகிறான். 2. அவன் விசுவகாரணன். உலகம் யாவற்றையும் அவனே தோற்றுவதாலும், அவனே காரணமாதலாலும் அவன் 'விசுவகாரணன் ஆகிறான். 3. அவன் விசுவரூபி. அவனே உலகமாய் நிற்பதாலும், இவ்வுலகையே உருவமாகக் கொண்டிருப்பதாலும் அவன் 'விசுவரூபி' ஆகிறான். 4. அவன் விசுவாந்தர்யாமி. அவன் இவ்வுலகத்தில் உள்ள எல்லாவற்றிலும் உட்பொருளாய் ஒளிர்கிறான் என்பதால் அவன் 'அந்தர்யாமி' ஆகிறான்.

இவ்விதம் பிரம்மம் ஆகிற பரம்பொருள் உலகம் யாவையும் இயக்கி 'சாட்டையில்லாப் பம்பரமாய்'ச் சுழல வைக்கிறான் என்பதை ஆதிசங்கரர் அடிப்படைக் கொள்கையாகக் கொள்கிறார்.

இந்த உலகில் நாம் காணும் எல்லாப் பொருட்களிலும் எது முழு முதல் உண்மைப் பொருளோ அதை நாம் நம் அறிவுக்கண் கொண்டு காண வேண்டும். நாம் காண்கின்ற எந்தப் பொருளும் உண்மையில் பார்க்கப் போனால் அதன் முழு முதல் மூலப் பொருள்தான் என்பதை உணர்வது அவசியம். தங்கம், வெள்ளி ஆகிய எந்த உலோகப் பொருளாக இருந்தாலும் உண்மையில் மேற்படி உலோகங்களின் அணுக்களால் உருவாகி நிற்கிற பொருள்கள்தான் அவை என்பதை நாம் மறக்கலாகாது. நாம் காண்கின்ற எல்லாப் பொருள்களிலும் முழு முதல் உண்மை மூலப் பொருள் அணுக்களே! எந்தப் பொருளையும் விஞ்ஞான முறையில் சிதைத்துக் கொண்டே போனால் எல்லாப் பொருள்களும் முடிவில் அணுக்களால் முடிவடைகின்றன. இந்த அணுக்களைச் சாதாரணமாய்ச் சிதைக்க இயலாது என்பதும், சிதைக்க முற்படும்போது மாபெரும் சக்தி உண்டாகிறது என்பதும் விஞ்ஞானத்தில் கண்டறியப்பட்ட உண்மைகள். அணுக்கள்தான் பலவிதமாய்ப் பரிணமித்து உலகிலுள்ள பல பொருள்களாக உருவாகியிருக்கின்றன. இந்த அணுக்கள் யாவையும் தன்னுள் அடக்கிய சக்தி (congealed energy) கொண்டவை என்பதெல்லாம் இன்றைய விஞ்ஞானக் கொள்கைகள். ஆகவே நாம் காணும் எல்லாப் பொருளிலும் முழு முதல்

'பூரம்' சத்தியமூர்த்தி
சென்னை.

உண்மை மூலப் பொருள் மாபெரும் சக்திதான் என்கிறது விஞ்ஞானம். இதை விஞ்ஞானிகள் 'முழு முதல் உண்மைத் தத்துவம்' (The theory of absolute reality) என்று சொல்வார்கள்.

சாதாரணமாக நாம் எந்தப் பொருளைப் பார்த்தாலும் இந்த நோக்கில் காண்பதில்லை. மண்ணால் செய்யப்பட்ட பானை உண்மையில் பார்க்கப் போனால் மண் அணுக்களே! அணுக்களே மண்ணாகி உருவாக்கு கிறவனின் திறமையால் பானையாக நிற்கிறது. இவ்வாறு உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் மாபெரும் சக்தி இயக்கத்தில் தோன்றி, மறுபடி அழிந்து போய்க் கொண்டிருக்கின்றன.

## ஆழியான் எரிப்பான் பெருவூழ் எடுந்து

களிறாட வெம்பிக் கருமுகி லாடக்
குளிராடு வெற்பரையா! காணத் — தளிராடு
தொங்கல் விரைமாலைத் தோளாடச் சோருமென்
கங்குல் கவித்த மனம்.

மனம்பூப்ப, முல்லை யரும்ப, முனைந்து
யினமீன் வெளிவா னரும்பும் — புனமயில்
ஆலும் வரையாய்! அரும்புஞ் செறிமுறுவற்
காலுமென் நெஞ்ச மணைந்து.

அணையுடை நீத்த மருவியாக, நாணி
யணையும் பெருமுகில் நீராய் — பிணைமான்
திரிதரு வெற்போய்! நின் றொங்கற் றுழாய்க்குச்
சொரியுமென் கண்ணும் பனித்து.

பனித்துளி, புற்றலைப் பொன்னெரிக்கப் பாரா
கனற்காற் கதிரோ னெரிப்பன் — இனவண்டு
ஆர்த்தாடும் வெற்போய்! நின் செங்கண் ணெரிப்பமன
மீர்த்தாடும் பாழில் எரிந்து

துவளுங் கொடியாடத் தேறா முகிலுந்
தவழக் கொடிபாயத் தோற்றும் — தவத்தார்
தினமேத்தும் வெற்போய்! நின் றண்ணருள் பாய
மனமேத்து மென்றும் மகிழ்ந்து.

மகிழ மலர் நாறத்தண் றென்றல்தான் மாறி
யகில்நாறு மாற்றாதே! மாண — முகிற்றூங்கு
மால்வரையாய்! நின் றுழாய் நாறச் சொரியுமென்
சேல்விழியு முள்ளஞ் சரிந்து.

துலங்குந்தெண் ணீரொலித் தாளநற் றும்பிச்
சிலம்பிச் செறிநறை மாந்தும் — நலங்கொள்
சிலம்பி லுறைவோய்! நின் தேர்கழு லார்க்க
அலமுறு மென்மன மீர்ந்து.

ஈர்ந்தண் சிறைப்புள் ளறைமிசை யாரவெங்
கூர்கதிர்த் தன்கதிர் சாய்க்குங்காண்! — கார்கிழக்கு
மாமலையோய்! நின்பதும் பாதம் மயக்கறுக்கு
மேமப் பெருவூழ் எடுத்து.

எடும்மென மத்தள மார்க்கப் பொறாதே,
எடும்மென வார்க்கும் முகிலாம் — நெடுமா
வனஞ்சூழ் வரையோய்! வரிசங்கங் காணப்
பனிக்கு மெழுபிறப்பும் பேர்ந்து.

பேர்ந்த பொறிவண் டிமிர, மறைநாலு
மோர்ந்த வடியார்தாம் ஓதுவார் — ஈர்ந்தண்
பனிகாயும் வெற்போய்நின் போதமுகங் காய்க்கும்
பிணித்த பெரும்பாட் பிறப்பு.

திரு. நவநீதகிருஷ்ணன்-போடிநாயக்கனூர்.

ஒரு பொருள் உருவாகும் செய்முறையைத் தலைகீழாகத் திருப்பி அமைக்க முடிந்துவிட்டால் எந்தப் பொருளும் அணுக்களாய் மாறிக் காற்றில் மறைந்துவிடும் என்று தற்கால விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கிறார்கள். இப்படிப் பொருள்கள் மூலப்பொருள்களாகக் காற்றில் மறைவதை 'எதிர் பொருள்' (Anti-matter) என்று அதை, ஒரு பொருளின் நீளம், அகலம், உயரம், காலம், என்கிற நான்கு பரிமாணங்களுக்குப் பிறகு ஐந்தாவது பரிமாணமாக விஞ்ஞானிகள் கணக்கிடத் தொடங்கியிருக்கிறார்கள்.

ஆதிசங்கரரின் தத்துவமான ஆதி பரம்பொருளான பிரம்மம், சக்தி வடிவமாய் 'தோற்றம்', 'ஒடுக்கம்' என்னும் இரண்டு நிலைகளில் உள் ஒளிர்ந்து நிற்கிறான் என்பது விஞ்ஞான ரீதியான உண்மையாகிறது!

இந்த உலகத்தில் நாம் காண்பதெல்லாம் உருவெளித் தோற்றம் தானே தவிர உண்மையில் அது பிரம்மம்தான் என்றும், அதுவே இப்படி ஒரு மாயைத் தோற்றத்தை உண்டு பண்ணுகிறது என்றும் ஆதிசங்கரரின் 'அத்வைதம்' விளக்கம் தருகிறது. உபநிஷதங்களில் சொல்லப்பட்ட **मायान्तु प्रकृति विद्यात्** என்பதற்கு இதுதான் விளக்கம் என்பது அவர் வாதம். பிரகிருதி என்பது மாயையே! அது உண்மையல்ல! இருளில் கிடக்கிற கயிறு நம் கண்ணுக்குப் பாம்பாகத் தெரிவது போல என்கிறார். **ब्रह्म सत्यं । लोकं मिथ्या ।** பிரம்மம்தான் உண்மை. அதுதான் முழு முதல் உண்மை. இந்த உலகம் பொய். இது வெறும் உருவெளித் தோற்றமே. 'மாயா' என்பது எது இல்லையோ அது. (**या मा सा माया**) இது இன்று விஞ்ஞானிகளின் விளக்கம்தான்!

# குருந்தமலை குழந்தை வேலாயுதன்

முன் காலத்தில் கொடிய வன விலங்குகளும், அடர்ந்த சோலையாகவும் விளங்கிய குருந்தமலை இன்று அமைதி தவழும் சூழ்நிலையில், சுற்றிலும் மலை சூழ்ந்து விளங்குகிறது. குருந்தமலையில் குழந்தைவேலாயுதன் ஏகாந்தமாக தண்டு, கௌபீனம், உத்திராட்சம் முதலியவற்றுடன் ஆண்டிக் கோலத்தில் காட்சியளிக்கின்றான்.

குழந்தையாகவும், யௌவன பருவமாகவும், கிழவனாகவும் காட்சி தந்து பக்தர்களுக்கு அருளுகிறார். இதை சந்தரலங்காரத்தில் அருணகிரிநாதர்,

‘‘ திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்
பாவை திருமுலைப்பால்
அருந்தச் சரவணப் பூந்தொட்டில்
ஏறி அறுவர் கொங்கை
விரும்பிக் கடலகழ்க் குன்றழ்ச்
சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவ என்று
ஓதுங் குவலயமே ’’

குறிஞ்சி நிலம் குருந்த மரங்கள் சூழ்ந்த சோலையாக முற்காலத்தில் இருந்ததால் குருந்தம் (மரம்)அசலம் (மலை) குருந்தாசலம் எனப் பெயர் பெற்றது.

குருமுனிவராகிய அகத்தியர் இங்கு வந்து தங்கியிருந்ததாலும், அகத்தியருக்கு மூலப்பொருளின் உபதேசங்களை உபதேசித்த குருவாக முருகன் இருந்ததாலும் குரு இருந்த மலை – குருந்தமலை எனப் பெயர் பெற்றது என்றும் வழங்குவர்.

இத்தலம் கோவை மாவட்டம் அவிநாசி வட்டம் காரமடை புகை வண்டி நிலையத்துக்கு மேற்கே மூன்று மைல் தொலைவில் பில்லூர், வெள்ளியங்காடு, தோலம்பாளையம் நெடுஞ் சாலையில் உள்ளது.

இராமாயணக் காலத்தில் சஞ்சீவிக்காக ஆஞ்சநேயர் இம்மலையில் வந்து தன் இடது பாதத்தை ஊன்றி நின்றதால் அவருடைய இடது பாதம் இன்றும் மலையில் அமைந்துள்ளது. ஆஞ்சநேயர் சன்னதி மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது இத்தலத்தின் விசேஷமாகும். ஆஞ்சநேய தீர்த்தம் நீண்ட ஆயுளைத் தந்திடும் என்பர். தாமரைச் சுனை என்னும் கஜபுஷ்கரணி ஆஞ்சநேயர் சன்னதிக்குக் கிழக்குப் புறத்தில் உள்ளது.

இம்மலையை ஒட்டி இன்னொருமலை உண்டு. அதற்கு வள்ளி மலை என்று பெயர். இதற்கு கன்னி மலை, கரிய மலை என்று வேறு பெயர்களும் உள்ளன. இங்கே ஒரு குகைக் கோயில் உண்டு. வள்ளி தெய்வானை மூர்த்தி எழில் கோலத்தில் காணப்படுகின்றன. காஞ்சிச்சுனை என்ற பெயரில் ஒரு தீர்த்தமும் உள்ளது. தைப்பூசத்தன்று இம்மலைச் சுனையிலிருந்து நீர்எடுத்து அங்குள்ள அம்மனுக்கு அபிஷேகம் செய்து அம்மனை அழைத்து வந்து திருக்கல்யாணம் செய்வது இங்கு மரபு.

குருந்தமலையின் முன் அடிவாரத்தில் முதலில் நம்மை வரவேற்பது கம்பீரமான முன் கோபுரம். வண்ணக் கோலத்துடன் விளங்குகிறது. உள்ளே வந்ததும் முதலில் கிழக்குப் பார்த்த பெரிய உருவத் திருமேனியான ‘‘ராஜ கம்பீர விநாயகர்’’ அமர்ந்துள்ளார். படிகளில் ஏறி மேலே வந்தால் சப்தமாதர் கோயில் அமைந்துள்ளது. இடும்பன் சன்னதியும் உண்டு. இம்மலையின் மேல் பாகத்தில் சிவாலயம் உள்ளது. விசுவநாதன், விசாலாட்சி அம்மன், பஞ்சாட்சர கணபதி, பஞ்சலிங்கம், வள்ளி தெய்வானையுடன் ஆறுமுக கல்யாண சுப்ரமண்யர், நவக்கிரஹ சன்னதிகளைக் காணலாம். கிழக்குப் புறம் ஒரே பாதையில் பெரியதாக ராஜலிங்கம் ஒன்று உள்ளது. அதையொட்டி நாகதீர்த்தமும், அகஸ்திய முனிவரால் பூஜிக்கப்பட்ட அகஸ்திய லிங்கமும் காணலாம்.

இந்த மலை முன்காலத்தில் மைசூர் சமஸ்தான ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. பிற்காலத்தில் ராயர் வம்சத்தார் ஆகிய மத்துவராயப் பாளையத்தாரால் பரிபாலித்து வந்த மதுரையை ஆண்ட திருமலை நாயக்கரால் ராயப்ப ஐயரை காரியஸ்தராக வைத்து பரிபாலனம் செய்து வந்ததாகக் கல்வெட்டு உள்ளது. எழுநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த இக்கோவிலில் ஆதிமூலஸ்தானம் மேற்கு பார்த்து அமைந்து இருந்தது என்றும் கூறுவர்.

ஒவ்வொரு கோவிலுக்கும் ஏதாவது ஒரு அற்புத நிகழ்ச்சி கதையாக சித்தரிக்கப்பட்டிருக்கும். ஆனால் இங்கு நடந்த நிகழ்ச்சி உண்மையாகவே நடந்தது என்பதற்கு ஆதாரங்கள் காணக்கிடக்கின்றன.

காரமடைக்குக் கிழக்கே பெள்ளாதி என்ற கிராமத்தில்

**அவிநாசி முருகேசன்.**

பெரிய வணிக மரபில் தோன்றிய கங்காதரம் செட்டியார் என்பவர் வியாபாரத்தின் பொருட்டு பொதி மாடுகளை ஓட்டிக் கொண்டு குருந்தமலை வழியாக கேரளாவிற்குச் செல்வர். இப்படி கூட்டத்தினராகச் சென்று கேரளாவிலிருந்து மிளகு ஏலம் முதலிய பொருள்களோடு திரும்பி வரும் வழியில் குருந்த மலையில் ஓய்வுக்காகத் தங்குவது வழக்கம். ஒருநாள் இரவு சாமியார் ஒருவர் அவர்கள் முன் தோன்றி ‘இந்த மூட்டைகளில் என்ன இருக்கிறது?’

## திருமாலின் அம்சங்களாய் அவதரித்த ஆழ்வார்கள்

1. பொய்கையாழ்வார் பாஞ்சன்னியமாகிய திருசங்கின் அம்சம்.
2. பூதத்தாழ்வார் கௌமோதகி என்று கூறும் கதாயுதத்தின் அம்சம்.
3. பேயாழ்வார் நாந்தகம் என்னும் வாளின் அம்சம்.
4. திருமழிசையாழ்வார் ஆழியின் அம்சம்.
5. நம்மாழ்வார் சேனை முதலிகளின் அம்சம்.
6. குலசேகராழ்வார் கெஸ்துப அம்சம்.
7. பெரியாழ்வார் ஸ்ரீ கருடாம்சம்.
8. திருப்பாணாழ்வார் ஸ்ரீ வத்ஸத்தின் அம்சம்.
9. திருமங்கையாழ்வார் சார்ங்கமென்னும் வில்லின் அம்சம்.

என்று கேட்க, பயந்து போன அவர்கள், இவை தவிட்டு முட்டைகள் என்று கூறினர். மறுநாள் மைசூர் வியாபார ஸ்தலத்திற்குச் சென்று அம்முட்டைகளை அவிழ்த்துப்பார்க்க அவை உண்மையிலேயே தவிட்டு முட்டைகளாக இருந்தன.

மறுபடியும் குருந்தமலை வந்து முதல் நாளிரவில் தம்முன் தோன்றிய சாமியாரை மனம் உருக வேண்டிக் சொள்ள அச்சாமியார் அவர்கள் முன் தோன்றினர். தம் தவறுகளை உணர்ந்த அவர்கள் தவிட்டு முட்டைகளைப் பழைய படியே மிளகுமுட்டைகளாகச் செய்யும்படி பிரார்த்தித்தனர். அவ்வாறே அத் தபஸி செய்வித்தார்.

சாமியார் வடிவில் வந்த முருகன் குழந்தை வடிவில் சங்காதரம் செட்டியாருக்குக் காட்சி கொடுத்தார்.

சங்காதரம் செட்டியாரின் வியாபாரம் பெருகியது. ஆதிமூலஸ்தானம் மற்றும் அர்த்த மண்டபம், சிவாலயங்கள் திருப்படிகள் முதலியவற்றைக் கட்டி முடித்துக் கும்பாபிஷேகம் செய்வித்தார். இவ்வணிகர் இம்மலையில் சன்னதிக்கு இடப்புறமாக நிர்விகல்ப சமாதியும் அடைந்தார். இன்றும் பாழடைந்த சமாதி உள்ளது.

இக்கோவில் பழனி மலையைப் போல் மேற்கு திக்கு நோக்கி அஸ்தமன காலத்து ஆதவன் தரிசிப்பது போல் அமைந்துள்ளது. கோவிலின் முன்புறம் மலையின் மேல் சுமார் 60 அடி உயரத்தில் மிகப் பெரிய தீப ஸ்தம்பம் ஒன்று அழகிய சிற்பவேலைப் பாடுடன் அமைந்துள்ளது.

## பனை மரத்தில் ஏறி தேங்காய் பறிப்பதா?

அண்மையில் ஜூன் மாத ஸப்தகிரியில் வெளியான ‘பகையும் பக்தியே’ என்ற கட்டுரையில் கண்ட கருத்து தவறானது. பகவானிடம் பக்தி கொண்டவன் மட்டுமே அவன் விதித்த தர்ம நெறிகளை மனமுவந்து ஏற்றுக் கொள்ளுகிறான். இதனால் மனித சமூகத்தில் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் வழி கோலப்படுகிறது. பகவானைப் பகைப்பவனோ சமூக கட்டுப்பாடுகளைக் குலைத்து விடுகிறான். தான் தோன்றித் தனமாகத் திரிகிறான். சதா காலம் தீயவைகளையே சிந்திக்கிறான். பக்தனோ தூய எண்ணங்களையே கொண்டிருக்கிறான். ஆண்டவனிடம் இடைவிடாத சிந்தனைக் கொண்டிருப்பதால் மட்டும் நற்கதியைப் பெற்றுவிட முடியாது. அந்த சிந்தனை தூயதாகவும் இருத்தல் அவசியம். தினை விதைத்தவன் தினையைத்தான் அடைய முடியும். சிசுபாலன், கம்சன் வாழ்க்கை வரலாறுகள் வித்தியாசமானவைகள். அவர்கள் விரும்பி வேண்டி ஏற்றுக் கொண்ட வேடங்கள்தாம் அவைகள். அவர்களின் உண்மை சொரூபம் பகைமையைக் கொண்டதல்ல. மேலும் அவைகள் விதி விலக்கானவைகள். பொது விதிக்கு பொருந்தா. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உண்மை தெரியும். எனவே அவர்கள் உய்வு பெற முடிந்தது. பகைவர்களாக இருந்தாலும் அவர்களுடைய லட்சியங்கள் மேலானவைகள். முக்திக்கு நேரான வழி பக்தி வழியே கீதையில் கண்ணன் கூறும் ராஜ பாட்டையும் இதுவேயாகும்.

ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றும் பொருந்திய பெருமையை இக் குருந்தமலை பெற்றுள்ளது. கௌமார மடாலயத்துத் தலைவர் கந்தசாமி ஸ்வாமிகள் குருந்தமலை மாலை, குருந்த மலை பதிற்றுப்பத்தந்தாதி, குருந்தமலை பிள்ளைத் தமிழ், கெம்பீர விநாயகர் பதிகம், ஆஞ்சநேயர் துதி, குருந்தமலை திருப்புகழ்ப் பதிகம் முதலான நூல்களைப் பாடியுள்ளார்.

வருடந்தோறும் தைப்பூசத்தன்று தேர்த்திருவிழா வெகு விமரிசையாகப் பதினொரு நாட்கள் நடைபெற்று வருகின்றன.



# திருவேங்கடம் அடை நெஞ்சமே!

திருமங்கையாழ்வார் தம் நெஞ்சத்தை அழைத்து இவ்வாறு கூறுகிறார்—திருவேங்கடம் அடை நெஞ்சமே!

இவ்வாறு ஒரு பத்துப் பாசுரங்களில் திரும்பத் திரும்பச் சொல்வார். பெரிய திருமொழியில் முதல் பத்தில் 8ம் திருமொழியாக அமைந்துள்ளது இந்தத் திருவேங்கடப் பாசுரம் பத்தும். சாதாரண, அர்ச்சாவதார மூர்த்தி கோயில் கொண்ட, ஏனைய கோயில்களில் ஏதோ ஒன்றென எண்ணிவிட வேண்டாம் எவரும் திருவேங்கடத்தை.

கண்ணபிரானின் பால லீலை ஒன்றை எடுத்தியம்புவது ஒரு பாசுரம்:

நின்ற மாமருது இற்றுவீழ நடந்த
நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொழும
இணைத்தாமரையடி எம்பிரான்
கன்றி மாரி பொழிந்திடக் கடிதா
நிரைக்கு இடர் நீக்குவான்
சென்று குன்றமெடுத்தவன் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே!

மரங்கள் இரண்டு பின்னிப் பிணைந்து நிற்கின்றன. அர்ஜுன மரங்கள் அவை. நம் தாமோதரக் கண்ணன், இடுப்பில் கயிற்றினால் கட்டிப் போட்ட உரலை வழி நெடுக இழுத்துக் கொண்டு, மரங்களின் ஊடே புகுந்து நீள வருகிறான். தடால் என்ற பேரோசை கேட்கிறது. மரங்கள் முறிந்து விழுகின்றன. அந்த இடத்தில் தற்போது சாப விமோசனம் பெற்ற இரு குபேர குமாரர்கள் நிற்கிறார்கள். இந்தப் பழைய பாகவத நிகழ்ச்சியை ஆழ்வார் நமக்கு நினைவூட்டுவார். பெருமாள் நடந்தால், நின்ற மரம் இற்று விழ்கிறது! இத்தனைக்கும் கண்ணன் குழந்தை. ஒன்றுமே அறியாத அப்பாவி; நின்மலன்; தாள்பாட்டில் தவழ்ந்து சென்றான்; மரங்கள் முறிகின்றன!

ஆம், சாட்சாத் சக்ரபாணி! அதனால்தான் இந்தத் திருவேங்கடமுடையானை என்றுமே தேவர்கள் கை கூப்பி வணங்குகின்றனர் - திருவடித் தாமரைகளை.

இன்னொரு கிருஷ்ணாவதார நிகழ்ச்சியும் இங்கு வருகிறது.

இந்திரன் கடும் கோபத்தோடு பேய் மழையைப் பொழியச் செய்தான். கோகுலத்து மக்களும் மாடு கன்றும் தவிக்க வொண்ணாது, கண்ணபிரான் உடனே சென்று அடுத்தாற் போல் இருந்த கோவர்தன மலையைக் குடையாக ஏந்திப் பிடித்து, ஆவினத்தின் துயர் களைந்தான்

சாட்சாத் அந்தக் கண்ணபிரானின் மலைதான் இத்திருவேங்கடம். அதனால்தான் வேங்கட கிருஷ்ணன் என்று பெயர் வைத்துக் கொள்கிறார் போலும்!

இன்னொரு பாசுரம். இதில் வாமனன் வருவார்.

வண்கையான் அவுணர்க்கு நாயகன்
வேள்வியில் சென்று மாணியாய்
மண்கையால் இரந்தான், மராமரம்
ஏழும் எய்த வலத்தினான்
எண் கையான் இமயத்துள்ளான்
இருஞ்சோலை மேவிய எம்பிரான்
திண்கைம்மா துயர்தீர்த்தவன் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே.

அந்த மன்னவன் பெயரே மகாபலி! அவுணர்க்கு நாயகன். கொடுத்துக் கொடுத்துப் பெருமை படைத்த வண்கையான்! - ஆழ்வார் கிண்டல் செய்கிறாரோ! அவனுடைய வேள்விச் சாலையில் சின்னஞ்சிறு பிரம்மசாரியாக, இதற்காகப் போகிறார்-என்று-மூவடி மண் கேட்கிறார் திருமால். பிச்சைக் கேட்பவன் இரண்டு கைகளையும் நீட்டித் தானே யாசிப்பான்?

கேட்டது கையால் கொண்டது என்னவோ காலால்! மூவடி மண் திருப்பாதத்தால் அன்றோ அளந்து கொண்டார்?

அடுத்தது இராமாவதாரம். மராமரங்கள் ஏழினையும் ஓர் அம்பால் துளைத்துத் தம் வலிமையை ஒரு சந்தேகப் பிரகிருதிக்குத் தாமே நிருபித்துக் காட்டிய இராமாயண கட்டம் பேசப் பெறுகிறது.

---

**நெய்வேலி நுனிப்புல்**

---

திருமால் எட்டுத் திருக்கரங்களோடு காட்சியளிக்கும் அஷ்டபுஜ க்ஷேத்திரம் அடுத்து வருவது. இமயத்தில் பத்ரிகாச்ரமத்தில் உள்ளவர், திருமாலிருஞ்சோலையிலும் மேவியவர்.

திரும்ப, இன்னும் ஒரு துயர் தீர்க்கும் கதை வருகிறது. கஜேந்திரனை அன்று முதலை கவ்வியபோது, காத்தருளிய எம்பெருமானின் இருக்கை இத்திருவேங்கடம் என முடிப்பார் திருமங்கை மன்னன். வலிமை மிகுந்த தும்பிக்கை இருந்தும்,பாவம், கஜேந்திரனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. துதிக்கையைத் தலை மேல் தூக்கி அவர் அரற்றினார். எம்பெருமான் ஓடோடிச் சென்று - பறந்து வந்து காப்பாற்றினார்.

உடன் எதிர்த் தோன்றிக் காத்தருளிய கதை இன்னொன்றும் வெகு பிரசித்தம். அதையும் ஆழ்வார் விட்டு வைக்கவில்லை. ஆம், தூணைப் பிளந்து கொண்டு, நொடிப் போதில் எதிர் நின்று பிரகலாத வசனம் பொய் அல்ல எனக் காட்டிய நிகழ்ச்சி!

எண்திசைகளும் ஏழுலகமும் வாங்கிப்
பொன் வயிற்றில் பெய்து
பண்டுஓர் ஆலிலைப் பள்ளி கொண்ட
வன் பால் மதிக்கு இடர் தீர்த்தவன்
ஒண்திறல் அவுணன் உரத்துகிர் வைத்
தவன் ஒள்ளெயிற்றொடு
திண்திறல் அரியாய் அவன் திருவேங்
கடம் அடை நெஞ்சமே.

அந்தக் காலத்தில், எட்டுத் திக்கிலும் விரிந்து நிற்கும் ஏழ் உலகங்களையும் விழுங்கி வயிற்றில் வைத்துக் காத்தவாறு, ஒரு சின்னஞ்சிறு ஆல் இலையில் பள்ளிகொண்டவர் எம்பெருமான். சந்திரனுக்கு க்ஷய ரோகத்தைப் போக்கினார்.

முரட்டு வலிமை மிகுந்த அரக்கன் ஆகிய இரணியனின் மார்பிலே நகங்களைப் பதித்து, ஒளி மிகுந்த கோரப் பற்களுடன் தோன்றிய நரசிம்ம மூர்த்தியின் உகந்த இடம் இத்திருவேங்கடம்தான்! திண்திறல் அரியாம் அவன். வலிமை மிகுந்த நரசிம்மம்! ஆலிலையில் கண் துயிலும் குழந்தையும், கொடிய அரக்கனையே நகத்தினால் கீறிப் பிளந்த சிங்கமும் ஒரே எம்பெருமான்தான். அது உலகத்தையே விழுங்கிய குழந்தை; அது கொடிய அரக்கனையே பதம் பார்த்த நரசிங்கம்.

திருமங்கையாழ்வார் ஒவ்வொரு பாசுரத்திலும் பழம் புராண நிகழ்ச்சி ஒன்றைக் கூறி, அந்த எம்பிரான் தாம் திருவேங்கடமுடையானாக எழுந்தருளியுள்ளார் எனத் தெளிவாக்குகிறார். ஒவ்வொரு பாசுரத்திலும் பரமனின் கருணையையும் நினைவூட்டுவதைப் பார்க்கலாம்.

ஆநிரைக்கு இடர் நீக்குவான்,
கைம்மா துயர் தீர்த்தவன்,
பால்மதிக்கு இடர் தீர்த்தவன்!

ஆம், அடியார்க்கு இன்னல் வந்தால், தீர்த்து வைப்பார் இவர். இவரை நெஞ்சிலே நிலைபெற நிறுத்தி வைத்து வழிபட வேண்டாமா? ஆனானப்பட்ட தேவாதி தேவரெல்லாம் என்றுமே இவருடைய தாமரைத் திருவடிகளைத்தான் தொழுகின்றனர். இமயத்திலும், இருஞ்சோலையிலும் உள்ள இவர் தம் இதயத்தில் என்றும் இடம் பெற வேண்டாமா?



# வேங்கடம் தொழுது நிற்போம்!

திரு. தி. ப. பாலசுப்ரமணியன்—திருப்பத்தூர்.

பாரெலாம் படைத்த ளித்தான்! பாற்கடல் தான்து யின்றான்!
காருலா வண்ண மேனி கண்ணனும் நம்மை நாடி
சீரெலாம் தருவ தற்கே வேங்கடம் ஓடி வந்தான்!
தாரணி தான்பு ரக்கும் மாலவன் கழல்கள் போற்றி!

பாரெலாம் கழல்கள் தோய பஞ்சவர்க் காய்ந டந்தான்!
பாரதப் போர்மு டித்தே பாதையாம் கீதை தந்தான்!
சீரடி கண்டு நாமும் சீர்கொளவேங் கடமே வந்தான்!
பேரெலாம் தான ளிக்கும் பூரணன் கழல்கள் போற்றி!

ஆயிரம் நாமம் கொண்டான்! அன்பினில் என்றும் பாரில்
தாயவள் தன்னை ஒத்தான்! தனக்கு வோர் உவமை யில்லான்!
மாயனாய்ப் பாரில் வந்து மண்ணகம் காத்துப் பிறவி
நோயினைப் போக்கு கின்ற நாரணன் கழல்கள் போற்றி!

செய்யவள் மார்பில் வைத்தான்! தாயுடன் காட்சி தந்தான்!
மெய்யுடன் உள்ளம் உருகி வேண்டிடும் அன்பர் உள்ளம்
பையவே சென்று சேர்வான்! பரிவுடன் காக்கும் தேவன்!
கையிலே குழலை ஏந்தும் கண்ணனின் கழல்கள் போற்றி!

ஆக்கவோர் பிரம்ம னானான்! அண்டமே ஆக்கி வைத்தான்
காக்கவோர் திருமா லாகி வையமே காத்த ளிப்பான்!
போக்கவே பிறவி தன்னைச் சிவனெனத் தோன்று கின்றான்!
பாக்கியம் தந்து பற்றைப் போக்கிடும் கழல்கள் போற்றி!

கருமுகில் நீல வானம் கான்வளர் மரங்கள் யாவும்
திருவளர் செல்வி யுடனே வண்ணமாய் வாழு கின்றான்!
கருத்தெலாம் வாசம் செய்வான் 'நீசரண்' என்று ரைத்தால்!
வருத்தமே போக்கி நாளும் வாழ்வருள் கழல்கள் போற்றி!

தாயுமாய்த் தந்தை யானான்! உறவெலாம் அவனே ஆனான்!
தூயவோர் நண்பன் ஆனான்! துணையெனத் தோன்று கின்றான்!
சேயெனக் காத்த ருள்வான்! வித்தைகள் யாவு மானான்!
மாயனாய் வந்து நின்ற மாதவன் கழல்கள் போற்றி!

பந்தமே போக்கு கின்றான்! பாம்பணை தான்து யின்றான்!
சொந்தமாய் வந்து நிற்பான்! அன்புடன் உருகி நின்றால்;
சந்தமே தந்து நாவை தன்வசம் ஆக்கு கின்றான்!
வெந்திடும் பாவம் எல்லாம் வேங்கடம் தொழுது நிற்போம்!

சைவ சமயத்தினர் வழிபடும் விநாயகரை வைணவ ஆகமங்களான வைகானஸ–பாஞ்சராத்ர ஆகமங்களில் விஷ்வக்ஸேனர் என்ற பெயரால் காணலாம்.

இந்த விஷ்வக்ஸேனரைப் பற்றி இரு ஆகமங்களும் சில விஷயங்களில் கருத்து வேறுபாடு கொண்டவைகளாகக் காணப்படுகிறது.

விஷ்வக்ஸேனர் என்பவர் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸேனாதிபதியாக இரண்டு ஆகமங்களும் கூறுகின்றன.

विष्वक्सेनं प्रापयित्वा प्रपायां तत्र वै रमे ।
पुण्याहवारिणा प्रोक्ष्य स्थापयेत्सैन्यनायकम् ॥

என்று ஸ்ரீப்ரச்ன என்ற பாஞ்சராத்ரஸம்ஹிதை கூறுகிறது.

னாக ஏற்றுக் கொண்டுள்ளா ஒரு சமயம் தேவர்களுக்கும் ரர்களுக்கும் யுத்தம் ஏற்பட் அப்பொழுது தேவர்கள் ப்ர னை சரணடைந்து வேண்ட, களைக் காக்க அஸுரர்களின் யங்களுக்கு விக்னம் ஏற்ப அவர் இந்த விஷ்வக்ஸேனரை டாக்கினார். அன்றைய தி லிருந்து விக்நநாசகனாக வி ஸேனரை வைணவர்கள் வ கிறார்கள். பாரமேச்வரஸம்ஹி யில்,

एवं गणाधिपश्चण्डो विक्रमेणापराजित:
क्रुद्धो विघ्नायुतानां च क्षणात्संहरणक्षम:॥

என்று கூறப்பட்டுள்ளது. விஷ்வக்ஸேனரின் உற்பத்தியை பாத்மஸம்ஹிதை வேறுவிதமாகக் கூறுகிறது.

# 'கோவிந்தன்'

கிடைத்தவுடன் கழுத்தி ா அணியக்கூடிய ஆபர யாக உள்ள தங்கங் லவா? எம்பெரு இருப்பவன்.

ச்வரஸம்ஹிதையில் கூற வரும் வாறு வருகிறது.

नवदूर्वाङ्कुराभं च त्विषत् पीतलकान्तिभाक्।
चतुर्दंष्ट्रं चतुर्बाहुं चतुष्किष्कुं चतुर्गतिम् ।

# வைணவத்தில் விநாயகர்

विष्वक्सेनमशेषनिर्जरमहासैन्याधिनाथम् ।

என்று வைகானஸாகமத்தில் கூறப்பட்டுள்ளது. சைவ புராணங்களில் விநாயகரை–ப்ரமதகணங்களுக்கு பரமேச்வரன் நியமித்துள்ளது கவனிக்கத்தக்கது. மேலும் விநாயகரை இடையூறுகளுக்குத் தலைவனாகவும், அவைகளைப் போக்கக் கூடிய தலைவனாகவும் வழிபட்டு வருகிறார்கள். அதே போல் வைணவத்திலும்

विष्वक्सेन: स्मृतो नेता भगवान् शुद्धकर्मणाम्।
तस्मात् नान्यमुपासीत कर्मणां विघ्नशान्तये॥

என்று ஸ்ரீப்ரச்ன ஸம்ஹிதை கூறுகிறது.

ஆகையினால் வைணவர்கள் கூட தாங்கள் செய்யும் நற்காரியங்களில் முதலில் விஷ்வக்ஸேனரை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளார்கள் எனலாம். நிற்க. வைணவாலயங்களிலும் விஷ்வக்ஸேனரின் வழிபாடு காணப்படுகிறது.

இந்த விஷ்வக்ஸேனரை தேவர்கள் தன் ஸைந்யத்திற்குத் தலைவ

தேவர்களுக்கும் - அஸுரர்களுக்கும் யுத்தம் ஏற்பட்டபோது சண்டன் என்ற ஒரு விஷ்ணுவின் வாசற்காப்பான் தன் தண்டத்தினால் அஸுரர்களைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றினான். அதனால் மகிழ்ச்சியடைந்த விஷ்ணு அவனுக்குத் தன்பலத்தையும், வீர்யத்தையும் கொடுத்து அவனுக்கு விஷ்வக்ஸேனன் என்று பெயரிட்டு அழைக்கலானார்.

பாத்மஸம்ஹிதை விஷ்வக்ஸேனரின் உருவத்தைப் பற்றிக் கூறுகிறது.

विष्वक्सेनं चतुर्बाहुं श्यामवर्णं किरीटिनम् ।
लम्बोदरं च मुख्येन करेणाभयदायिनम् ॥
दक्षिणेन प्रसव्येन समालम्ब्य कटिस्थितम् ।
आसीनमपराभ्यां च हस्ताभ्यां शङ्खचक्रिणम्॥

நான்கு கைகளும், நீலநிறமும், கிரீடமும், பெரிய வயிறும், ஒரு கையால் அபயமும், இரண்டாவதை இடுப்பில் வைத்துக்கொண்டும், மற்ற இரண்டு கைகளினால்

पूर्णाङ्गं केसरिस्कन्ध पृथूरस्थलराजितम् ।
दक्षिणावर्तनिम्नेन नाभीरन्ध्रेण शोभितम् ॥

அருகம் புல் போன்ற ஒளியையுடையவரும் கொஞ்சம் மஞ்சளான காந்தியையுடையவரும், நான்கு கோரைப் பற்களையுடையவரும் நான்கு உள்ளங்கைகளையுடையவரும் நான்கு விதமான கதிகளையுடைய

டாக்டர் டி. ஜி. அனந்தசுப்ரமணியன்,
திருப்பதி.

வரும், பூர்ணமான அங்கங்களையுடையவரும் சிங்கத்தின் கழுத்து போன்ற கழுத்தையுடையவரும், பெரிதான, அகலமான மார்பையுடையவரும், வலதுபுறம் சுழிக்கப்பட்ட தொப்புளையுடையவருமாக இருப்பார். வேறு சில ஸம்ஹிதையில் சாந்தமானவரும், கோரைப் பற்கள் இல்லாதவரும், அபய ஹஸ்தத்தோடு கூடியவரும், கதையைத் தரித்திருப்பவரும், சங்கம், சக்ரம் இவைகளைக் கையிலேந்தியவரும்

நான்கு கைகளையுடையவருமாகவும் கூறப்படுகிறது.

இரண்டு கைகளையுடைய விஷ்வக்ஸேனர் சங்கம், சக்ரம் இவைகளைத் தவிர முன் கூறிய லக்ஷணங்களோடு கூடியவரும், கதா என்ற ஆயுதமில்லாதவரும், ஸ்தானகாஸனத்தில் ஊன்றிய கையையுடையவரும், கோபதீ முத்ரையுடன் அல்லது கடகரூபமான முத்ரையுடன் மற்ற இரண்டு கைகளிலும் ஒன்றுமில்லாதவராகவும் இருப்பார்.

சேஷஸம்ஹிதையில் "शङ्खचक्रधरं देवं वरदाभयदायिनम् । सर्वाभरण संयुक्तं विष्वक्सेनमहं भजे" ॥ என்று கூறப்பட்டுள்ளது.

அநேகமாக எல்லா ஸம்ஹிதைகளிலும் நான்கு கைகள், சங்கம், சக்ரம், கதை முதலியவைகள் குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்கத்தக்கது. விஷ்வக்ஸேனரின் உருவத்தை ஆகமங்கள் பலவிதமாகக் கூறுகின்றன.

இந்த விஷ்வக்ஸேனரை ஆலயத்தில் எங்கே பிரதிஷ்டை செய்வது என்ற விஷயத்திலும் பற்பல கருத்துக்கள் நிலவுகின்றன. ஸ்ரீ பிரச்ன ஸம்ஹிதையில்

सोमेशानन्तरे देवं विष्वक्सेनं प्रकल्पयेत् ।

(94-15)

என்றும்,

அதே ஸம்ஹிதையில்,

ईशाने सैन्यनाथं च कल्पयेत्कमलासने என்றும் வருகின்றது.

அதாவது ஈசான பாகத்தில் ஸ்தாபிக்கவேண்டும் என்பது கருத்தாகும்.

प्रासादद्वारवामे तु विष्वक्सेनस्य मण्डपम्

(33-2)

என்று கபிஞ்ஜல ஸம்ஹிதை கூறுகிறது.

ஏகபேர ஸ்தலத்தில் (பேரம் என்றால் விக்ரஹம் என்று பொருள்). பரிவார தேவதைகள் கிடையாது. பல பேர ஸ்தலத்தில் மட்டும் பரிவார தேவதைகள் உண்டு. கபிஞ்ஜல ஸம்ஹிதையில் ஈசான பாகத்தில் ஸோமேசானர்களுடைய மத்தியில் ஐந்தாவது ஆவரணத்தில் விஷ்வக்ஸேனரை வைக்க வேண்டுமென்று கூறுகிறது.

विष्वक्सेनं तथा तार्क्ष्यं स्वगेहे स्थापयेत्सुधीः ।
चक्राब्जमण्डलेईशानकोणेस्थाप्यो विष्वक्सेनः ॥

என்று பாத்மத்தில் கூறப்பட்டுள்ளது.

வட்ட வடிவமான தாமரை மலர் போன்ற மண்டலத்தில் ஈசான திக் பாகத்தில் வழியில் விஷ்வக்ஸேனரை வைக்க வேண்டும். இந்த அபிப்ராயத்தை எல்லா ஸம்ஹிதையிலும் காணலாம்.

பொதுவாகப் பார்க்கும்போது ஈசான திக்கிலேதான் விஷ்வக்ஸேனருடைய ஸ்தானம் என்று தெரிய வருகிறது. ஆகையால் ஈசானதிக் பாகத்தில் ஸோமேசருடைய மத்தியில் விஷ்வக்ஸேனரை பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்பது கருத்தாகும்.

விஷ்வக்ஸேனருக்கு மனைவி ஒருவள்தான் என்று பாஞ்சராத்ராகம நூல்களிலிருந்து தெரிய வருகிறது.

विष्वक्सेनं सकलविबुधप्रौढसैन्याधिनाथं
मुद्राचक्रे वरकरयुगे शंखदण्डौ दधानम् ।
मेघश्यामं सुमणिमकुटं पीतवस्त्रांशुभाङ्गं
ध्यायेद्देवं दलितदनुजं सूत्रवत्या समेतम् ॥

என்ற தியானச்லோகத்தினால் விஷ்வக்ஸேனருடைய மனைவியின் பெயர் ஸூத்ரவதீ என்பது தெரிய வருகிறது.

ஆனால் பாத்மஸம்ஹிதையில் விஷ்வக்ஸேனருடைய மனைவியின் பெயர் புஷ்பதரா என்று காணப்படுகிறது.

देवीं च विष्वक्सेनस्य वामपार्श्वे प्रतिष्ठिताम् ।
नाम्ना पुष्पधरां कुर्यात् कमलामिव लक्षिताम् ॥

(22-41)

ஸ்ரீ ப்ரச்னஸம்ஹிதையில் ஸூத்ரவதி என்ற பெயரும் யானை முகம் என்ற உருவத்தையும் காணலாம்.

ततः सूत्रवतीनाथं समभ्यर्च्य यथाविधि ।
दर्भपुञ्ज समादाय सेनेशं प्रार्थयेत् गुरुः ॥
सेनेश द्विपवक्त्रादि परिचर्या परद्रव ॥

(379-15)

என்று கூறப்பட்டுள்ளது.

முத்ரையைப் பற்றி கூறும் பொழுது விஷ்வக்ஸேன முத்ரை என்று ஒன்று ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது. அதாவது ஆள்காட்டி விரலை உயர்த்தி மற்ற மூன்று விரல்களை மடக்கி வைத்துக்கொள்வது.

कनिष्ठादित्रयं ब्रह्मन् संहृत्यांगुष्ठेकन च ।
निबध्य तर्जनीं भूयो विष्वक्सेनस्य मुद्रिका ॥

என்று பாத்மஸம்ஹிதையும்,

विमुक्त तर्जनीमुष्टिः विष्वक्सेनस्य प्रीतिदा ।

என்று புருஷோத்தம ஸம்ஹிதையும் கூறுகின்றன.

ஆனால் ஸ்ரீ ப்ரச்னஸம்ஹிதையில் வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது.

कनिष्ठाङ्गुलीस्तिस्रः संहृत्याङ्गुष्ठकेन च ।
नियोज्य तर्जनीं भूयो विष्वक्सेनस्य मुद्रिका ॥

அதாவது எல்லா விரல்களையுமே மூடி (முஷ்டி)க் கொண்டிருப்பதாகும்.

முத்ரை என்றால் அடையாளம் என்று கூறலாம். இறைவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பது முத்ரை என்று கூறப்படுகிறது.

मुदे भगवतः मुद्रां दर्शयेत् देशिकोत्तमः ।
यस्मान्मुदं द्रावयति तस्मान्मुद्रेति कीर्त्यते ॥

விஷ்வக்ஸேனரை ஸேனாதிபதியாகக் கூறுவதால் அவருக்கு இம்மாதிரி முத்ரை பொருத்தமானதாகும். விஷ்வக்ஸேன மந்த்ரம்: 'ओं नमो भगवते विष्वक्सेनाय' பீஜாக்ஷரம்: "क्षम" என்பது.

விஷ்வக்ஸேனருக்கு பன்னிரண்டு திருநாமங்கள் (பெயர்கள்) உண்டு.

श्रीमान् सूत्रवतीनाथो गजास्यमुखसेवितः ।
प्रसन्नवदनः शान्तः प्रभाकरसमप्रभः ॥
वेत्रपाणिरलीकेशो विश्वरक्षापरायणः ।
भक्तान्तरायविध्वंसी आर्यक्षान्त कृपानिधिः ॥

இம்மாதிரி ஒவ்வொன்றும் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன. பொதுவாக சைவாகமத்தில் எவ்விதம் விநாயகருக்கு முதல் இடம் கொடுத்தும், வழிபட்டும் வருகிறார்களோ அதே போல் வைணவாகமங்களில் விஷ்வக்ஸேனரை வழிபடுகிறார்கள் எனலாம். மற்ற காரியங்களிலும் விநாயகருக்கு என்னென்ன வழிபாட்டு முறைகளைக் கையாண்டு வருகிறார்களோ அதே போல் வைணவர்கள் விஷ்வக்ஸேனரை கொண்டாடி வழிபடுகிறார்கள் எனலாம். சைவத்தில் விநாயகரும், வைணவத்தில் விஷ்வக்ஸேனரும் முழுமுதற் கடவுளாவர்.

# ‘கூடாரை வெல்லும் சீர் கோவிந்தன்’




## முன்னுரை

ஸ்ரீ:யப்பதியான ஸ்ரீமந்நாராயணன் நித்ய ஸூரிகளும் பிராட்டிமார்களும் கொண்டாட அந்தமில் பேரின் பத்தடியவரோடு இருக்கும் பரம பத வாழ்வை விட்டு இவ்விருள் தருமா ஞாலத்தில் பல்வேறு அவதாரங்கள் எடுத்து மண்ணுலகம் உய்ய மநுசர் உய்ய அநுக்ரஹித்தான். அப்படி பல்வேறு அவதாரகாலங்களிலும் பல்வேறு நாமங்களைத்தாங்கினன். ஓர் நாமம், ஒருருவம் ஒன்றுமிலாத அவன் ஆயிரத்தெட்டு திருநாமங்களைப்பெற்றான். ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இந்நாமங்களில் தங்களை ஈடுபடுத்திக்கொண்டு தங்கள் சிஷ்யவர்க்கத்துக்கும் வீடு பேற்றைப் பெற வழி காட்டினர். இப்படி இறைவனுக்குப் பல நாமங்கள் இருந்த போதிலும் ஆழ்வார்கள் சில நாமங்களில் பெரிதும் ஆழங்கால்பட்டு அதனை மிகவும் ஆதரித்துப் போருவர். அத்தகைய ஏற்றம் பெற்ற நாமங்களில் சிறந்தது ‘‘கோவிந்தன்’’ என்ற நாமமாகும்.

## பெருமை

‘‘அவன் கட்டிப் பொன் போலே, அவன் நாமம் பணிப்பொன் போலே’’ ‘‘அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்று உதவும்,’’ ‘‘ஆபத்திலே திரௌபதிக்கு புடவை சுரந்தது திருநாமமிறே’’ என்பன ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்திகளாகும். இதன் பொருள்: ‘‘இறைவன் தங்கக்கட்டி போன்றவன். அவனது திருநாமம் என்பது தங்கத்தினால் செய்யப்பட்ட ஆபரணங்கள் போன்றவை. அவன் நம்மிடமிருந்து வெகு தூரத்தில் இருப்பினும், அவனுடைய நாமங்கள் நம் அருகே இருந்து உதவும். திரௌபதிக்கு — ஆபத்துக் காலத்தில் புடவை சுரக்கச் செய்தது—அவன் நாமமே’’. இடைத்தவுடன் கழுத்திலோ கையிலோ அணியக்கூடிய ஆபரணங்கள், கட்டியாக உள்ள தங்கத்தைவிட விசேஷமல்லவா? எம்பெருமான் பரமபதத்தில் இருப்பவன். ஆனால் அவனது திருநாமங்கள் பூவுலகில் நம்மை ஒட்டி அருகில் இருப்பவை. எனவேதான் திரௌபதியின் மான சம்ரக்ஷணார்த்தம் கோவிந்தன் வருவதற்கு முன் அவன் நாமம் முந்திக்கொண்டு புடவையைச் சுரக்கச் செய்தது. இத்தகைய பெருமை அவனது நாமத்துக்கு உண்டு எனப் பூர்வாசார்யர்கள் அறுதியிட்டனர்.

## கோவிந்த நாமம்

திருமாலுக்கு 1008 நாமங்களை இட்டு அழைத்து மகிழ்ந்தாலும் பரமபதத்தில் ‘‘நாராயணன்’’ என்ற பெயரும் பூவுலகில் அவதரித்த பின ‘‘கோவிந்தன்’’ என்ற பெயருமே சிறந்த திருநாமங்கள் எனப் பெரியோர்கள் கண்டனர். நாராயணன் என்ற சப்தம் பற்றிப்பிறிதொரு சமயம்விரிவாகக் காண்போம்.

---

திரு. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி,
திருச்சிராப்பள்ளி.

---

கோவிந்தன் என்பது பசுக்களைக் காப்பவன் என்ற பொருள் கொண்டது. பரமபதத்தில் இருக்கும் இருப்பைக் காட்டிலும் பசுக்கூட்டத்தில் இருக்கும் இருப்பை இவன் பெரிதும் விரும்புவான். தானாகப் புல்மேயும் பசுக்களைரக்ஷிப்பதைவிடபுல்மேயவும் அறியாத கன்றுகளிடம் இவனுக்கு மிகவும் உகப்பு மேலிட்டிருக்கும். ‘‘பசு நிறை மேய்ப்புவத்தி’’ ‘‘கன்று மேய்ந்து இனிதுகந்த காளாய்’ ‘கன்று மேய்த்து விளையாடவல்லானை’’ என்பன போன்ற ஆழ்வார்களின் சொற்கள் இவ்வர்த்தத்தை

விசேஷமாகக் குறிக்கும். இப்பெயரில் பெரிதும் ஈடுபட்ட ஆண்டாள் தன் திருப்பாவையில் 27, 28, 29 ஆம் பாசுரங்களில் முறையே ''கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா'' "இற்றைப்பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா'' என மும்முறை கூறினாள். ஆதிசங்கர பகவத்பாதரும் ''பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே'' எனக் கூறினார்.

## கூடாரை வெல்லும் கோவிந்தன்

ஆண்டாள் தனது முதல் விளியில் "கூடாரை வெல்லும்சீர்கோவிந்தா'' என அழைக்கிறாள். ''உன்னுடன் கூடாதாவரை வெல்லக் கூடியவனே'' என்பது இதன் பொருள். அநுமன், அங்கதன் இவர்களைத் தூதாக அனுப்பியும், "இன்று போய் நாளை வா'' எனக் கூறிய பின்னரும் ''உன்னுடன் கூடமாட்டேன்' என்ற ராவணன்; கட்டுக்காவல்களை மீறி வடமதுரையை விட்டு ஆயர்பாடி சென்று வளர்ந்து மல்லர்களையும் குவலயாபீடம் என்ற யானையையும் வதைத்து, பூதனை, சகடன், வத்ஸாசுரன் முதலானோரை எமனுலகம் அனுப்பி தன் தெய்வாம்சத்தைக் காட்டிய பின்னரும் தன்னுடன் கூட மறுத்த கம்ஸன்; தன் காலுக்கருகில் உட்காரவும் கூடாதென்றிருந்த துரியோதனன் போன்ற கோஷ்டியை வென்ற இவன் புகழ் உலகம் அறிந்ததே. ஆயினும் இவ்விளியில் வெளிப்படையான பொருளைவிட சிறந்த ஒரு பொருள் இதன் எதிர் மறையில் கிடைக்கிறது. 'கூடாதவரை வெல்பவன்'' என்பதற்கு எதிர்மறை "கூடினவர்களிடம் தோற்பவன்'' என்பதாக அமையும். உன்னை எதிர்ப்பவர்களைத்தானே உன்னால் வெல்ல முடியும் ''த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே'' என்று கூறிய ஆளவந்தார் போலவும் "இலங்கு பாதமின்றி மற்றோர் பற்றிலேன் எம் ஈசனே'' என்ற திருமழிசைப்பிரான் போலவும் உன்னை பாகவதர்கள் பக்கலிலே நீ தோற்று நிற்கத்தான் முடியும் என்பது விசேஷ அர்த்தம்.

## அன்புக்கு நான் அடிமை

ஆயர்பாடியில் கண்ணன் செய்யும் தீம்புகளுக்கு ஓர் அளவில்லை. பலர் வீடுகளில் வெண்ணெய், தயிர் இவைகளைக் களவாடல், கன்றை அவிழ்த்து விடல், தயிர்ப் பானைகளை உடைத்தல் போன்று பல தீம்புகளைச் செய்து வந்தான். இவனைப்பற்றி யசோதையிடம் மற்றைய ஆயர்குலப் பெண்கள் புகார் செய்யாத நாளே கிடையாது. ஆனால் இவனது ''அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் தொழுகையும்''கண்ட அளவில் இவன் மீது எவர்க்கும் இரக்கம் பிறந்து ''இக்குழந்தை மீது ஏன் இப்படி பலப்பலவாக அபாண்டமாகக் குறை கூறுகின்றனர்.'' என்ற எண்ணம் ஏற்படும். ஒரு நாள் இவனைப்பற்றிய பற்பல புகார்களைக் கேள்வியுற்ற யசோதை கடுங்கோபம் கொண்டாள்."இவனை வெளியே திரிய வைப்பதனால் அன்றோ இத்துணை தீம்பு புரிகிறான். ஓரிடத்தில் கட்டிப் போட்டு விட்டால் என்ன?'' என எண்ணினாள். எண்ணம் செயலாக உருவெடுத்தது. அருகில் இருந்த ஒரு உரலில் கண்ணனைச் சேர்த்து வைத்துக் கயிற்றினால் கட்டத் தொடங்கினாள். இராமாவதாரத்தில் ''ஆத்மானம் மாநுஷம் மன்யே'' என்றபடிக்குத் தன்னை மனிதனாகக் காண்பித்துக் கொண்டான். ஆனால் கிருஷ்ணாவதாரத்திலோ தன் அதிமாநுஷ்ய சேஷ்டிதங்களைப் பிறந்த பொழுதே தன் பெற்றோர்களுக்கு உணர்த்திய ப்ரபு ஆகையினாலே, தன் வளர்ப்புத் தாயான யசோதைக்கும் காட்ட திருவுள்ளங்கொண்டான். உடனே கட்டக்கட்ட தன் இடுப்பைப் பெரிதாக்கிக் கொண்டான். கயிறு போதாமல் இரு நுனிகளையும் சேர்த்து முடிந்துவிடமுடியவில்லை. மற்றொரு கயிற்றை எடுத்து இதனுடன் இணைத்தாள் யசோதை. அப்பொழுதும் சேராமல் போகும்படித் தன் இடையைப் பெரிதாக்கினான். உலகேழையும் தன் ஒரு திருவடியால் அளந்த அண்ணலுக்குத் தன்னைப் பெரிதாக்கிக் கொள்ளுதல் ஒரு பெரிதல்லவே! யசோதை பல கயிறுகள் கொண்டு கட்டியும் இவனைக் கட்ட முடியவில்லை. யசோதை மிகவும் கைசோர்ந்து உடல் களர்ந்து மிகவும் வாட்டமடைந்தாள். நெற்றியிலே வியர்வை துளிர்த்தது. முகம் வெளிறியது போல் காணப்பட்டது. இதனைக் கண்ட கண்ணன் உள்ளம் பொறுக்கவில்லை. ஒருத்தி மகனாய்ப் பிறந்து இவளிடம் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தவன் அல்லவா? பெற்ற தாயினும் மேலாக, திருமுலைப் பால் ஊட்டி வளர்த்த அந்த அன்னை உடலும் மனமும் சோர நின்ற அந்நிலை அவனது மனத்தை மிகவும் வருத்தியது. எனவே யசோதையின் அன்புக்குக் கட்டுப்பட்டு உடனே தன் இடையைச் சிறியதாக்கிக் கொண்டான். யசோதைப் பிராட்டியும் உடனே கண்ணனை உரலில் கட்டினாள். பண்டை நான்மறையும், வேள்வியும், வேள்விப்பதங்களும், பதங்களின் பொருளும் இவனைக்கட்டுப்படுத்தத் தோற்று நிற்குங்காலை, இடக்கை வலக்கை அறியாத இடைச்சி ஒரு கயிற்றினால் கட்டி விட்டாள் என்பது பேராச்சர்யம் அல்லவா? இது எப்படி சாத்தியமாயிற்று இவ்விடத்தில். யசோதையின் தாயன்புக்கு முன் இவனது ஸ்வாமித்வமாகிற குணங்கள் விலை போகவில்லை. அவள் அன்புக்குத் தோற்றுத் தன்னை சிறியவனாக்கிக் கொண்டான். இக்குணத்திலே ஆழங்காற்பட்ட மதுரகவியாழ்வார் ''கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்'' என்கிறார்.

## பார்த்தசாரதி

கௌரவர்களும் பாண்டவர்களும் கண்ணனுக்குச் சம உறவினர்களே. ஆயினும் பாண்டவர் பக்கலிலே இவ

னது தயையும் உபகாரமும் பள்ள மடையாய்ப் பாய்ந்தது. கௌரவர்கள் பக்கலிலே சிறிதும் அநுக்ரஹம் பிறக்கவில்லை. ஏன்? பாரதப் போரில் உதவி கோரி வந்த துரியோதனன் இவனது காலுக்கருகில் உட்காரவும் கூசினான். ஆனால் பார்த்தனோ இவனது காலுக்கருகில் நின்றபடி "செங்கண் சிறுச்சிறுதே யெம்மேல் விழியாவோ" என்றபடி காத்திருந்தான். பலன்? கூட மறுத்த துரியோதனன் படைகளையும் ஆயுதங்களையும் கோரிப்பெற்று அழிந்தான். கூடியவனான பார்த்தனுக்குக் கண்ணன் தேரோட்டியாக அமர்ந்து தேரோட்டியும் அவனது குதிரைகளைத் தேய்த்துக் குளிப்பாட்டியும் "சேனயோ: உபயோர் மத்யே ரதம் ஸ்தாபயமே அச்சுதா" என்றவாறே ரதத்தை ஓட்டியும் ஸாரத்யம் செய்தான். இவனை ஆச்ரயித்த பாண்டவர்களிடம் இவன் தாஸனாய் நின்றது எங்ஙனம்? இவனைப் பற்றுக்கோடாக எண்ணி கால் பிடிப்பவர்களிடம் இவன் தோற்று விடுகிறான் என்பது கையிலங்கு நெல்லிக்கனி.

## சகாதேவனிடம் தோற்றது

கிருஷ்ணன் தூது வெற்றி பெறவில்லை. இனிப் போர்தான் என முடிவு செய்யப்பட்டது. இது குறித்து கிருஷ்ணன் பாண்டவர்களுடன் ஆலோசனை செய்தான். "பாரதப் போரைத் தவிர்க்க முடியுமா" என்பதே ஆலோசனையின் முக்ய நோக்கம். இது குறித்து ஒவ்வொருவரும் தத்தம கருத்தைக் கூறுமாறு கண்ணன் கூறினான். சகல சாஸ்திர பண்டிதனான சகாதேவனை முதலில் தன் கருத்தைக் கூறுமாறு கேட்டான.

"பாண்டவர் பக்கலிலே சமர்த்தனான அர்ச்சுனனையும், "அவனைக் கொல்லுவேன்" எனச் சூளுரைத்துத் திரியும் கௌரவர் பக்கலிலே உள்ள கர்ணனையும் கொன்று, "துச்சாதனன் இரத்தத்தை என் தலையில் தடவிய பிறகுதான் என் கூந்தலை முடிப்பேன்" என்று சபதம் பூண்டுள்ள திரௌபதியின் கூந்தலை மழித்தும், அகடந கடநா சாமர்த்தியமும் மாயமும் புரியும் உன்னையும் கட்டிப் போட்டு விட்டால் இம் மாபாரத யுத்தத்தைத் தவிர்க்க முடியும்" என்று சகாதேவன் கூறினான். கண்ணன் சிரித்துக்கொண்டு "சகாதேவா, நீ கூறிய யாவும் மிகக் கடினமானதுதான் என்றாலும் மிகவும் பிரயாசைப்பட்டு அவைகளில் சிலவற்றை முடிக்க முடியும். கர்ணன், பார்த்தன் இவர்களைக் கொன்று பாஞ்சாலியின் கூந்தலையும் அழிக்கலாம். என்னைக் கட்டுவது என்பது உன்னால் முடியுமா?" என்று கேட்டான். சகாதேவன் "கண்ணா, இது ஒன்றுதான் மிகச் சுலபமான காரியம். இது என்னால் முடியும்" என்றான். கண்ணன் உடனே சகாதேவனைத் தனி இடத்திற்கு அழைத்துச் சென்று "எங்கே? என்னைக் கட்டு பார்க்கலாம்" எனக் கூறி, தான் திருமால் என்பதைக் காட்டுவதற்காக விசுவரூபம் எடுத்தான். அவ்வுருவத்தில் "பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும் பெருகிய புனலொடு நிலனும், கொண்டல் மாருதமும் குரை கடலேழும் ஏழுமாமலைகளும் விசும்பும் அண்டமும் தானாய் நின்று" காட்சியளித்தான். சகாதேவன் ஒரு சிறிதும் கலக்கமடையவில்லை. கீழே பத்மாசனமிட்டு அமர்ந்து ஸ்ரீ:யப்பதியான அந்த வாசுதேவனை அகத்தையும் புறத்தையும் ஒன்றாக நிறுத்தி வாசுதேவ மஹா மந்திரத்தை செபித்து உருவேற்றினான். "உலகேழும் ஓர் மூவடி கொண்டானை" என்று ஆழ்வார் மங்களாசாசனம் செய்த இம்மூர்த்தி, வாசுதேவ மந்திரத்தை அவன் திரிகரண சுத்தியுடன் ஜெபிக்க, தன்னால் ஒரு அணுவளவு கூட கைகளையோ, கால்களையோ அசைக்க முடியாததை உணர்ந்தான். அவன் மேலும் மேலும் ஜபிக்க, இவனை இம்மந்திரம் இறுகக் கட்ட ஆரம்பித்தது. யசோதைப் பிராட்டியிடம் இவன் செய்த மாயம் இங்கு விலை போகவில்லை



அவிநாசி ஈஸ்வரர் கோயில். அம்பாள் கருணாம்பிகை. திருவாசகம் பெற்ற ஸ்தலம். இங்கு சுந்தரமூர்த்தி நாயனாருக்கு கோயிலுண்டு.
திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி - கோவை.

கட்டின் இறுக்கத்தைப் பொறுக்க முடியாது கண்ணன், "சகாதேவா, நான் தோற்றேன். உன் பக்திக்கு முன்னல் என்னல் ஒன்றும் செய்ய இயலவில்லை என்னை இக்கட்டிலிருந்து விடுவிப்பாயாக!" என்ருன். சம்சாரமாகிற இக்கட்டிலிருந்து மானிடர்களை விடுவிக்கும் சக்தி படைத்த எம்பெருமான் சகாதேவனுல் கட்டப்பட்ட கட்டிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முடியாமல் துவண்டான். இது எங்ஙனம்? சகாதேவன் கண்ணனைக் கூடாமல் எதிர்த்திருப்பானேயாகில் அவனை, க்ஷண நேரத்தில் அழித்திருக்க முடியும். ஆனல் அவனைக் கூடி அவனையே தாரக, போஷக, போக்யமாகக் கொண்டகாலையில் அவன் தோற்று நின்றது இங்கு அறியத்தக்கது.

## துலாபாரப் பிரபாவம்:

கண்ணனுடைய பிராட்டிமார்களில் ருக்மிணியும் சத்யபாமையும் குறிப்பிடத்தக்கவர்கள். பெரிய பிராட்டி கிருஷ்ணவதாரத்தில் ருக்மிணியாக அவதரித்தாள். அழகும், ஆபிஜாத்யமும் (உயர்குடிப் பிறப்பு) இருந்தும் கண்ணனிடம் மிகுந்த பக்தி பூண்டவள். பாமையும் கண்ணனிடம் பக்தி கொண்டவளாயினும் அழகிலும் செல்வத்திலும் மிகுந்த கர்வம் கொண்டவள். ஒரு சமயம் கண்ணனைத் துலாபாரம் செய்து (எடைக்கு எடையான பொருளைக்கொண்டு நிறுப்பது) தன் அன்பை வெளியிட பாமை விரும்பினுள். கண்ணன் துலாத் தட்டில் ஒருபுறம் வீற்றிருக்க மறுபுறம் தங்கம், வைரம், வைடூர்யம் போன்ற விலையுயர்ந்த வஸ்துக்களால் துலாபாரம் செய்தாள். கண்ணன் வீற்றிருந்த தட்டு உயர எழும்பவில்லை. எவ்வளவு பொருள்களை இட்டும் அது உயரவில்லை. மனந் தளர்ந்து விட்ட நிலையில் கண்ணன் ருக்மிணியைக் கூப்பிட்டு "நீ துலாபாரம் செய்" என்ருன். ருக்மிணி சிறிதும் அகங்காரம், மமகாரமின்றி காலியான மற்ருெரு தட்டில் கண்ணனை உள்ளன்புடன் தியானித்து அவனது சரணங்களைத் தன் மனத்திலிருத்தி ஒரு துளசி தளத்தை மற்ருெரு தட்டில் இட்டாள். உடனே தட்டு உயர்ந்து துலாக்கோல் நேராக நின்றது. பாமை தன் அகம் ஒழிந்து கண்ணனை வணங்கினுள் தன் ஐச்வர்யத்தினுல் இவனைக் கொள்ள முடியும் என்று எண்ணி இருந்த பாமை தோற்க, இவனை பக்தியினுல் கூடிய ருக்மிணிப் பிராட்டி வென்ருள்.



திருச்சூர் பூரம் திருவிழா. திரு. வி. முத்துராமன் - கோவை.

## முடிவுரை:

இத்தகு விருத்தாந்தங்கள் மூலமாக இறைவனுல் தன்னை எதிர்ப்பவர்களை மட்டுமே வெல்ல முடியும் என்பதும், இவனையே "மாமேகம் சரணம் வ்ரஜ" என்றபடி சரணமடைந்து, உபாய உபேயங்கள் இவனே எனக் கால் பிடித்துத் திரிபவர்களிடம் இவன் தன்னை அழியச் செய்துகொண்டு உற்ற நண்பனுகவும், ஏன், இழிதொழில் செய்யும் அடிமையாகவும் இருந்து இவன் தோற்று நிற்கிருன் என்பது விளங்குகிறது. இக்கருத்தே "கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா" என்பதின் மறைபொருளாக விளங்குகிறது என்பதில் தட்டில்லை. ★



# ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில் பிரம்மோற்சவம்

## திருமலை

**17-9-85 முதல் 25-9-85 வரை**

**கருடசேவை: 21-9-85** **திருத்தேர்: 24-9-85**

**சக்ரஸ்நாநம்: 25-9-85**

தென்னிந்தியாவிலுள்ள மிகவும் புராதனமான, தொன்று தொட்டு புகழுடன் விளங்கி வரும் ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், மேல் கோட்டை முதலியவற்றைவிட உலகப் புகழ் பெற்று விளங்கி வருகிறது திருமலை திருப்பதி புண்ணிய ஸ்தலங்கள்.

திருமலையில் உறைகின்ற பெருமாளைப் பற்றி சுமார் 2,200 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட பழம் பெரும் தமிழ் நூலான 'தொல்காப்பியத்தில்' குறிப்பிடப்பட்டுள்ளதன் மூலம் இத்தலத்தின் பழைமையை அறிகிறோம்.

'' வடவேங்கடந் தென்குமரியாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகம்''

என்ற தொல்காப்பிய பாடல் வரிகளும்,

'' நெடியோன் குன்றமுந்
தொடியோன் பௌவமும்
தமிழ் வரம் பறுத்த
தண் புனல் நன்னாடு''

என்ற சிலப்பதிகார பாடல் வரிகளும் அக்காலத்தில் தமிழகத்தின் எல்லை திருப்பதி வரை பரவியிருந்தது என்பதைத் தெரிவிக்கின்றன.

திருமலை, ஆழ்வார்களால் பாடப் பெற்ற திருத்தலம். 12 புராணங்களிலும், உபபுராணங்களிலும் இத்தலத்தின் மகிமையை பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இத்தலங்களையும், வேங்கடவனையும் வர்ணித்துப் பல பாடல்கள் உள்ளன.

அகநானூறு, மாமூலரின் பாடல்கள் முதலியவற்றிலும் திருமலையைப் பற்றிய பல பாடல்கள் இருக்கின்றன. சிலப்பதிகாரத்தில் இன்றும் நடைபெறும் 'பூலங்கி சேவையை'ப் பற்றியும் கூட,

'' பொலம் பூ வாடையிற் பொலிந்து
தோன்றிய
செங்கண் நெடியோன்''

என்ற வரிகள் கூறுகின்றன.

கி. மு. 100-150 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த தொண்டைமான் சக்ரவர்த்திதான், பாம்புப் புற்றினுள்ளே சுயம்பு

# திருமலை-திருப்பதி

மூர்த்தியாய் விளங்கிய ஸ்வாமிக்கு முதன் முதலில் கோவில் கட்டியதாக புராணம் கூறுகிறது.

தென்னிந்தியாவில் கி. பி. 800 ஆண்டுகளுக்கு பிறகுதான் கற்கோவில்கள் தோன்றின. அதனால் திருமலையில் 8ம் நூற்றாண்டிற்கு முன்பு செங்கற்களாலான கோவிலாகத்தான் இருந்திருக்க முடியும்.

திருமலைக் கோவிலிலுள்ள மிகப் பழைய கல்வெட்டு கி. பி. 790ம் ஆண்டில் விஜய ஆதித்த மன்னனின் பிறப்பைப் பற்றியது. கோவிலின் வெளிச் சுவர்களில் கி. பி. 1200க்கு முற்பட்ட காலத்தின் கல்வெட்டுகள் உள்ளன.

அக்காலத்தில் திருமலையை ஏறுவது மிகக் கடினமானதாக இருந்தது. அதனால் திருச்சானூர் என்றும் அலர்மேல் மங்காபுரம் என்றும் இன்று அழைக்கப்படும் அன்றைய திருச்சோகினூரில் பல்லவ ராணியான சமவையாரால் ஒரு திருவிளாங்கோவில் கட்டப்பெற்றது.



திருமலைத் திருத்தேர்



திருச்சானூர் கோயில் திருத்தேர்

இங்கு கி. பி. 826ம் ஆண்டில் திருமலையிலுள்ள விக்ரஹத்தைப் போலவே ஒரு வெள்ளி விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்து வழிபாடு நடத்தப்பட்டு வந்தது. அக்காலத்தில் திருச்சானுருக்கு வரதராஜபுரம் என்ற மற்றொரு பெயரும் இருந்தது.

ஆனல் திடீரென்று சோழர்களின் புகழ் ஓங்கியது. அவர்கள் கட்டிய பராஸரேஸ்வரன் கோவில் பெரும் புகழ் பெறத் தொடங்கியது. (இந்த கோவில் இன்றும் இடிந்து சிதைந்த நிலையில், திருத்தணிக்கு அருகில் இருக்கிறது.) இதனல் 960ம் ஆண்டில் வைஷ்ணவ பக்தர்கள் மீண்டும் திருமலைக்கே வர ஆரம்பித்தனர்.

நாதமுனி அடிகளாருக்கும் திருமலை கோவிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவரது கொள்ளுப் பேரனை திருமலை நம்பியும் இக் கோவிலுக்காக தன்னையே அர்ப்பணித்துக் கொண்டார். இவரது மருமகனை ஸ்ரீராமானுஜர்தான் திருமலை கோவிலில் பல விதிமுறைகளையும் ஆகமங்களையும் ஏற்படுத்திஞர். இவற்றுள் பல இன்றும்கூட பின்பற்றப்பட்டு வருகின்றன.

அப்போதைய சோழ மன்னன் சிதம்பரத்தில் இருந்த கோவிந்தராஜ பெருமாளின் சிலையை கடலில் எறிந்து விடுமாறு உத்தரவிட்டான். ஆனல் ஸ்ரீராமானுஜர் அச்சிலையை எடுத்து வந்து திருப்பதிலுள்ள பார்த்தசாரதி கோவிலில்பிரதிஷ்டை செய்தார்.

இதற்கு முன்பு திருப்பதி காட்டூர் என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தது. பிறகு கோவிந்த ராஜப் பட்டினம் என்ற பெயரும் விளங்கியது. அதனுல்தான் இன்று திருப்பதி கோவிலிலுள்ள ராஜ கோபுரம் கோவிந்தராஜ ஸ்வாமி சன்னதி எதிரே இல்லாமல், பார்த்தசாரதி சன்னதி எதிரே இருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

திருமலை நம்பி கோவிலிலிருந்து 3 மைல் தூரத்திலிருந்த பாபவிநாஸனம் தீர்த்தத்திலிருந்து தினமும் ஸ்வாமியின் அபிஷேகத்திற்கு நீர் எடுத்து வருவாராம். ஒரு நாள் ஸ்வாமி சிறுவன் உருவில் வந்து நம்பியிடம் நீர் கேட்க அவர் தர மறுத்தாராம். ஆனல் நம்பி கோவிலையடைந்தபோது ஸ்வாமி அபிஷேகத்திற்கு தேவையான நீர் ஏற்கனவே பாத்திரங்களில் நிறைந்திருந்ததாம். ஸ்வாமி நம்பியின் பக்தியை மெச்சி கோவிலுக்கு மிக அருகில், ஆகாச கங்கையில் தீர்த்தத்தை உற்பத்தி செய்ததாக ஒரு புராணக்கதை விளங்கி வருகிறது.

ஆதியில் பெருமாள் திருமலை வந்தடைந்தபோது அங்கு ஏற்கனவே வராக ஸ்வாமி கோவில் கொண்டிருந்தாராம். இன்று கூட முதலில் வராக ஸ்வாமியை தொழுத பிறகே பெருமாளை வணங்கும் பழக்கம் இருக்கிறது. ஆனல் வராக ஸ்வாமியைப் பற்றிய குறிப்பு கி. பி. 1380க்கு பிறகே கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.

---

*திரு. T. S. திருவேங்கடம்,*
*திருப்பதி.*

---

திருப்பதியிலுள்ள கோவிந்தராஜ ஸ்வாமி கோவிலை 1130ம் ஆண்டில் ஸ்ரீராமானுஜர் கட்ட ஆரம்பித்தார். ராஜகோபுரம் கட்டும் பணி 1160ம் ஆண்டில் தொடங்கப் பெற்றது. இப்போது திருப்பதியிலுள்ள திருமலை பஸ் நிலையம் அருகில் இருக்கும் கோனேரி-புஷ்கரிணி 1522ம் ஆண்டில் கட்டப் பெற்றது ராஜகோபுரம் 1628ம் ஆண்டில் கட்டி முடிக்கப் பெற்றது.

விஜயநகர அரசனுன வீரநரசிம்மன் கி. பி. 1368ம் ஆண்டில் துலாபாரம் செய்வித்து எடைக்கு எடை தங்கம் கொடுத்தான்.

கிருஷ்ண தேவராயர் 7 முறை திருமலை வந்ததாக கல்வெட்டுகள் கூறுகின்றன. இவர் மிக அதிக அளவில் கோவிலுக்கு நன்கொடைகள் வழங்கினர். 5ம் முறையாக 1417ம் ஆண்டில் சென்றபோது 30,000 தங்க வராகன்கள் கொடுத்ததற்கான கட்வெட்டு ஒன்று இருக்கிறது.

பசிண்டி வேங்கடத்துறைவார் என்று அழைக்கப்பட்ட இராமானுஜ அய்யன் ஜீயர் என்பவர் கி. பி.

திருமலை கோவிலின் ராஜகோபுரம் 1217ம் ஆண்டில் கட்டி முடிக்கப் பெற்றது, 50 அடி உயரம் உடையது. கோவிலின் வெளிச்சுவர்கள் 415 அடி நீளமும், 263 அடி அகலமும் உடையன. மொத்த பரப்பளவு 2 ஏக்கராகும். கோவிலில் மொத்தம் 3 பிரகாரங்கள் இருக்கின்றன. உள் பிரகாரம் முக்கோடிப் பிரகாரம் என்றும் நடுபிரகாரம் சம்பங்கி பிர காரம் என்றும், வெளிப் பிரகாரம் சங்கு பிரகாரம் என்றும் பெயர்.



திருமலையில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள ''க்யூ'' கட்டிடத்தொகுதி

திருமலைக் கோவிலில் மொத்தம் 1180 கல்வெட்டுக் குறிப்புகள் உள்ளன. இவற்றில் 50 மட்டுமே தெலுங்கிலும் கன்னடத்திலும் உள்ளன. மற்றவை யெல்லாம் தமிழில் தான் உள்ளன.



திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில் திருத்தேர்

1491ம் ஆண்டில் ''வேங்கடாசல மஹாத்யம்'' என்ற பெயரில் தெலுங்கில் ஸ்தல புராணம் பாடினார்.

விஜயநகர அரசனை இரண்டாம் ஹரிஹரன் கி. பி. 1309ம் ஆண்டி லிருந்து திருமலையிலும் திருப்பதி யிலும் தனது பிரதிநிதிகளாக ஜீயர் களை நியமித்தான். முதன் முதலில் முல்லை திருவேங்கட ஜீயர் இப் பொறுப்பினை ஏற்றார். இன்றும்கூட திருமலையிலும் திருப்பதியிலும் ஜீயர் மடமும், ஜீயர் ஸ்வாமிகளும், பொறுப்பில் உள்ளனர்.

15ம் நூற்றாண்டில் ஹதிராம்ஜி என்ற பெருமாள் பக்தர் திருமலை வந்தார். பெருமாள் இவருடன் சதுரங்கம் விளையாடி தன்னையும் தனது கோவில் முதலிய அனைத்தை யும் இழந்து விட்டாராம். அதனால் கோவிலின் வருமானம் அனைத்தும் ஹதிராம்ஜியின் சீடர்களுக்கும், அவர் நிறுவிய மடத்திற்கும் சேர வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. இது அம் மடத்தார் கூறும் செய்தியாகும். இன்றும் ஹதிராம்ஜி மடத் திற்கு திருமலையிலும் திருப்பதியி லும் கோடிக்கணக்கான சொத்துக் களும் உள்ளன.

கி. பி. 1262ம் ஆண்டில், சுந்தர பாண்டியன் காலத்தில்தான் தங்க கோபுரம் பற்றிய குறிப்புகள் முதன் முதலில் காணப்படுகின்றன; இந்த கோபுரம் ''ஆனந்த நிலையம்'' என் றும் குறிப்பிடப்படுகிறது. இது 3 அடுக்குகளை உடையது. முதல் 2 அடுக்குகளும் சதுர வடிவமுடையது. 3வது அடுக்கு வட்ட வடிவமுடை யது.

முதல் அடுக்கில் எந்த சிலையும் கிடையாது. 2வது அடுக்கில் 40 சிலைகளும், 3வது அடுக்கில் 20 சிலை களும் உள்ளன. 1953ம் ஆண்டில், 12000தோலா தங்கம் உபயோகித்து, 18 லட்சம் ரூபாய் செலவில் ஆனந்த நிலைய கோபுரம் பழுது பார்க்கப் பட்டு, புதிய செப்புத் தகடுகளைப் பொருத்தி நவீன முறையில் மதுரையை சேர்ந்த ஸ்தபதிகளாலும் பொற் கொல்லர்களாலும் தங்க முலாம் பூசப்பட்டது.

இதற்கு முன்பு 1908ம் ஆண்டில் மஹந்த் பிரயாக் தாசரின் சீடரான மஹந்த் இராம லட்சுமண தாசர் தங்க கோபுரத்தைப் பழுதுபார்த்துத் தங்கமுலாம் பூசினார். கி. பி. 1630ல் காஞ்சி கன்யகாதானம் தாத்தாச்

சாரி என்பவரால் தங்கமுலாம் பூசப்பட்டது. கி. பி. 1417ம் ஆண்டில் கிருஷ்ண தேவராயரின் அமைச்சரான அமாத்ய சேகர மல்லண்ணு தங்க விமானத்தை புதுப்பித்ததாக கல் வெட்டிலிருந்து அறிகிறோம்.

வடக்கு முக்கோட்டி பிரகாரத்தில் விமான வேங்கடேஸ்வரரை த்வைத்த ஆசார்யரான ஸ்ரீவியாச தீர்த்தர் வழிபட்டு முக்தி யடைந்ததாக வரலாறு கூறுகிறது. அதனுல் இன்று கூட அனைவரும் விமான வேங்கடேஸ்வரரைத் தரிசித்து முக்தி அடையும் பொருட்டு தனிபீடம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

இன்று மிக்க புகழ் பெற்று விளங்கும் ஸ்ரீ வேங்கடஸ்வர சுப்ரபாதம் 16ம் நூற்றுண்டிலிருந்துதான் பாடப்பட்டு வருகிறது. இது பிரதிவாதி பயங்கரம் அண்ணன் என்பவரால் எழுதப்பட்டது. இதற்கு முன்பு பிரபந்தப் பாடல்களே திருமலைக் கோவிலில் பாடப்பட்டு வந்தன.

தாளப்பாக்கம் அண்ணமாச்சார்யார் ஸ்ரீனிவாசப் பெருமாள் மீது 32,000 சங்கீர்த்தனங்கள் பாடியதாகக் கூறப்படுகிறது. ஆனல் தற்சமயம் 2,590 சங்கீர்த்தனங்களே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவர் கி. பி. 1408முதல் 1503 வரை வாழ்ந்தார்.

சங்கீத மும்மூர்த்திகளுள் ஒருவரான தியாகராஜர் திருவேங்கடவனைப் பற்றி "வெங்கடேசா நின்னி ஸேவிம்பனு பதி வேல கண்னுல காவல அய்யா" மற்றும் 'தெர தீயக ராதா' என்ற இரண்டு கீர்த்தனைகள் பாடியுள்ளார்.

முத்து ஸ்வாமி தீட்சிதர் 5 பாடல்கள் பாடியுள்ளார். ஸ்யாமா ஸாஸ்த்ரி ஒரு கீர்த்தனையும் பாடியுள்ளார். புரந்தர தாசர், வியாஸ ராஜர், பட்டினம் சுப்பிரமணிய ஐய்யர் முதலிய பலர் வேங்கடவன்மீது பல பாடல்களையும், கீர்த்தனைகளையும் இயற்றி இருக்கின்றனர்.

17ம் நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்தே ஆங்கிலேயர்கள் திருமலை-திருப்பதி கோவில்கள்மீது ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்துவிட்டனர். ஆற்காடு நவாப் ஆங்கிலேயர்களின் உதவியை தொடர்ந்து பெறுவதற்காக 1724ம் ஆண்டிலிருந்து வருடா வருடம் 2 லட்சரூபாய் கொடுத்து வந்தான்.

வருடத்திற்கு 2 லட்ச ரூபாய் கொடுக்கவேண்டியிருந்ததால் அந்தக் காலத்திலேயே ஸ்வாமி தரிசனத்திற்கு, புஷ்கரிணியில் குளிப்பதற்கு, கற்பூர ஆர்த்தி எடுக்க, நைவேத்யம் செய்வதற்கு என்று எல்லாவற்றிக்கும் கட்டணங்கள் வசூலிக்கப்பட்டன.

1843ம் ஆண்டில் கோவிலின் நிர்வாகம் ஆங்கிலேயரிடமிருந்து மஹந்த் மடாதிபதிகளிடம் மாறியது. இவர்களது காலத்தில் கோவிலின் வருமானம் பெருமளவு பெருகியது. சாதாரண நாட்களில் மூன்று தரிசனங்களுக்கு 2 ரூபாய் கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. விசேட நாட்களில், பூலங்கி சேவை முதலிய



ஸ்ரீ வேதநாராயணசுவாமி திருக்கோயில் —நாகலாபுரம்

சேவைகள் ஒவ்வொன்றுக்கும் 1 ரூபாய் வசூலிக்கப்பட்டது.

நாளடைவில் மஹந்த்களின் நிர்வாகம் சீர்குலைய ஆரம்பித்ததால், 1933ம் ஆண்டு திருமலை திருப்பதி தேவஸ்தான கமிட்டி அமைக்கப்பட்டது.



திருப்பதியில் உள்ள ஒரே சிவன் கோயிலான ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில் (ஆழ்வார் தீர்த்தம்)

தேவஸ்தானம் கல்வித் துறைக்கு ஆற்றியுள்ள தொண்டு அளப்பரிய தாகும். தேவஸ்தானம் கீழ்கண்ட கல்லூரிகளை பொறுப்பேற்று நடத்து கிறது.

ஸ்ரீ வேங்கடேஸ்வர கலைக் கல்லூரி (ஆண்கள்); ஸ்ரீ பத்மாவதி கலைக் கல்லூரி (மகளிர்); ஸ்ரீ வேங்கடேஸ்வரா உயர்நிலைப்பள்ளி (ஆண்கள்); ஸ்ரீ பத்மாவதி உயர்நிலைப்பள்ளி (மகளிர்); ஸ்ரீ கோவிந்தராஜ ஸ்வாமி கலைக் கல்லூரி (ஆண்கள்); ஸ்ரீ வேங்கடேஸ்வரா தொழிற் பயிற்சி கல்லூரி (மகளிர்); ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஓரியண்டல் கல்லூரி; ஸ்ரீ வேங்கடேஸ்வரா சிற்பக்கல்லூரி; ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசைக்கல்லூரி; ஸ்ரீ வேங்கடேஸ்வரா யோகாசனப் பயிற்சி நிலையம்; ஸ்ரீ வேங்கடேஸ்வரா கண் பார்வையற்ற மற்றும் காது கேளாதவர் பள்ளி; ஸ்ரீ வேங்கடேஸ்வரா பால மந்திர் முதலிய கல்வி நிறுவனங்கள் திருப்பதியில் செயல்பட்டு வருகின்றன.

தேவஸ்தானம் திருமலையில் கீழ்க் கண்ட கல்வி நிறுவனங்களை நடத்து கிறது.

ஸ்ரீ வேங்கடேஸ்வரா சமஸ்க்ருத உயர்நிலைப்பள்ளி; ஸ்ரீ 'வேங்கடேஸ்வரா வேத பாடசாலை; ஸ்ரீ வேங்கடேஸ்வரா குருகுலப்பள்ளி; ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஆரம்பப்பள்ளி; ஸ்ரீவேங்கடேஸ்வரா உயர்நிலைப்பள்ளி.

ஐதராபாத்தில் வேதாந்த வர்தினி சமஸ்கிருதக் கல்லூரி, டில்லியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்லூரி, வேலூரில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா உயர்நிலைப் பள்ளியையும் நடத்துகிறது.

இதோடு ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் அமைந்திருக்கும் பல நூறு ஏக்கர் நிலத்தை ஒரே ஒரு ரூபாய்க்கு தேவஸ்தானம் அரசாங்கத்திற்கு விற்றது. இங்கு மிகச் சிறப்பான முறையில் தமிழ்துறை இயங்கி வருகிறது. ஒரு பேராசிரியரும், 3 விரிவுரையாளர்களும் பணி புரியும் இத்துறையில் டாக்டர் பட்டம் (Ph.d., மற்றும் M.Phil.,) பெறவும், தமிழ் முதுகலைப்பட்டம் (M.A.) பெறவும் வசதி இருக்கிறது.

சென்ற வருடம் ஆந்திர முதல்வரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட ஸ்ரீ பத்மாவதி மகளிர் மல்கலைக் கழகம் திருப்பதியில் செயல்பட ஆரம்பித்துள்ளது. இதன் துணைவேந்தரான திருமதி. வனஜா ஐயங்கார் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்.

தற்சமயம் மத்திய அரசினால் நடத்தப்படும் கேந்திரீய ஸமஸ்கிருத வித்யா பீடத்தை ஸம்ஸ்கிருத பல்கலைக் கழகமாக மாற்ற பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வருகின்றன. இதனால் திருப்பதியில் 3 பல்கலைக் கழகங்கள் செயல்படும் அரிய பெருமையை அடைய இருக்கிறது.

ஆந்திராவிலேயே படிப்பறிவு மிக்கவர்கள் அதிகமாக வாழும் நகரங்களுள் திருப்பதி முதல் இடம் வகிக்கிறது. ஆம் திருப்பதியில் நூற்றுக்கு 62 பேர் கல்வியறிவு உள்ளவர்கள். இந்நகரத்தின் தற்போதைய மக்கள் தொகை $1\frac{1}{2}$ லட்சம். திருமலையில் சுமார் 25,000 பேர் வசிக்கிறார்கள். இதோடு தினமும் சராசரியாக 20 முதல் 30 ஆயிரம் பக்தர்கள் கூட்டமும் (Floating population) வந்து போகிறார்கள்.

திருப்பதியிலுள்ள சில தமிழ் பெரியோர்கள் ஒன்று சேர்ந்து தமிழ் கலாச்சாரக் கழகம் ஒன்றை பல ஆண்டுகளுக்கு முன் தோற்றுவித்தனர். இலவச தமிழ் வகுப்புகள், நாட்டிய, இசை வகுப்புகள் நடத்தப் பட்டு வந்தன. ஆனால் தற்சமயம் இங்கு வாழும் தமிழ் குழந்தைகள் தமிழ்மொழி மூலம் கல்வி கற்க வேண்டி ஒரு ஆரம்பப் பள்ளியை மட்டுமே நடத்துகின்றனர்.

திருப்பதியிலுள்ள சில தெருக்களின் பெயர்கள் மிகவும் விநோதமானவை. 'சித்தகாயலு வீதி'=புளியங்காய் வீதி, 'மஞ்சாலவீதி'=கட்டில் வீதி, 'நிம்மகாயலு வீதி=எலும்பிச்சை பழம் வீதி, 'ஆகு தோட்ட வீதி'=கீரை வீதி, என்ற பெயர்கள் உண்டு. 2 அடி அகலமுள்ள சந்து கூட சிமெண்ட் தரையுடன் விளங்குகிறது—உபயம் தி. தி. தேவஸ்தானம்.

தற்போது திருமலையிலிருந்து திருப்பதி வருவதற்கு பயன்படும் மலைச்சாலையானது 1949ம் ஆண்டில் கட்டப் பெற்றது. அப்போது திருப்பதியிலிருந்து திருமலைக்கும், திருமலையிலிருந்து திருப்பதிக்கும் 2 பஸ்கள்தான் இருந்தன. ஆனால் இன்று 2 நிமிடத்திற்கு ஒரு பஸ் வீதம் காலை 4-30 மணிமுதல், இரவு 10-30 மணி வரை பஸ் போக்குவரத்துகள் உள்ளன.

திருப்பதியிலிருந்து திருமலைக்குச் செல்லப் பயன்படுத்தி வரும் சாலை சமீபத்தில் போடப்பட்டதுதான். இந்த சாலையில் 8-10 வளைவுகளே உள்ளன. ஆனால் இறங்கும் சாலையில் 62 வளைவுகள் உள்ளன. இரவு வேளைகளில் திருப்பதியில் இருந்து பார்த்தால் பஸ்கள் திரும்பும்போது பளிச் பளிச்சென்று லைட்கள் வெளிச்சம் தொடர்ந்து காணப்படுவது கண் கொள்ளாக் காட்சியாகும். சில சமயம் தொடர்ச்சியாக 5-6 பஸ்கள் இறங்கிக் கொண்டிருந்தால் மினி ரயில் வண்டி வளைந்து வளைந்து இறங்குவதைப் போல தோற்றமளிக்கும். படிகட்டுப் பாதையில் போடப் பட்டுள்ள மின் விளக்குகள் இரவில் திருமலையிலிருந்து பாலாறு ஓடி வருவதைப் போல தோற்றமளிக்கும். மலையுச்சியின் மீதுள்ள "காலி" (காற்று) கோபுரத்தில் நாமமும், அதன் 2 பக்கத்திலும் சங்கு சக்ர விளக்கு அலங்காரங்களும் செய்யப் பட்டுள்ளன.

திருமலையிலிருந்து திருப்பதி வரும் சாலை முழுவதும் "மெதுவாக ஓட்டவும்", "ஏறும் வாகனங்களுக்கு முத

லில் வழி விடுங்கள்'' என்று பல அறிவிப்புகள் இருக்கின்றன. இதற்குக் காரணம் சுமாரான பலத்த மழை பெய்தால்கூட ஆங்காங்கே மலைச்சரிவுகள் ஏற்படுகின்றன. ஆனால் இறங்குவதற்குப் பயன்படுத்தப்படும் பழைய சாலை யானது எவ்வளவு மழையானாலும் உபயோகத்தில் இருக்கிறது. மலைச் சாலையில் ஏறும் போதோ இறங்கும் போதோ கார், வேனில் ஏதாவது பழுது ஏற்பட்டு விட்டால் அதை சரி செய்ய இரண்டு Automobile clinic-க்குகளை தேவஸ்தானத்தினர் 2 வேன்களில் நடத்தி வருகின்றனர்.

திருப்பதியிலிருந்து அலிப்பிரி வழியாகத் திருமலை செல்லும் படிக்கட்டு பாதை 11 கி. மீ. தூரமுடையது. இது கருடாத்ரி, அஞ்சனாத்ரி, சேஷாத்ரி, விருஷபாத்ரி, நீலாத்ரி, வெங்கடாத்ரி, நாராயணாத்ரி முதலிய ஏழுமலைகளின் வழியே செல்கிறது. சத்திரகிரியிலிருந்தும் 5 கி.மீ. தூரமுள்ள மற்றொரு படிக்கட்டுப் பாதையும் இருக்கிறது.

1929ம் ஆண்டில்தான் இந்த பாதை (அலிப்பிரி) மின் விளக்குகள் பொருத்தப்பட்டன. ஆனால் இன்று வழி நெடுகிலும் வெயில், மழை முதலியவற்றிலிருந்து பாதுகாப்பாக பக்தர்கள் வசதியுடன் மலையேறுவதற்காக சிமெண்ட் கூரைகள் போடப் பெற்றுள்ளன. மருத்துவமனை, உணவு விடுதி, கூர்க்கா, போலீஸ் முதலியவர்களால் பந்தோபஸ்தும் மேற்கொள்ளப்படுகிறது.

யாத்ரீகர்கள் களைப்பில்லாமல் மலையேற வழி நெடுகிலும் குடி தண்ணீர் வசதியும், பக்திப் பாடல்களின் ஒலி பரப்பும் இருக்கிறது. அலிப்பிரியிலிருந்து திருமலைக்கு இலவசமாக பஸ் மூலம் மலையேறும் பக்தரின் உடமைகள் கொண்டு செல்லப்படுகின்றன.

அதிகாலை 3 மணி, எங்கு பார்த்தாலும் ஸோடியம் விளக்குகளால் திருமலை பூலோக சொர்க்கம் போல காட்சியளிக்கிறது. அந்த நேரத்திலேயே நூற்றுக்கணக்கான பக்தர்கள் சுப்ரபாத தரிசனம் செய்ய டிக்கட் வாங்கும் நீண்ட க்யூவில் நின்றிருக்கிறார்கள். இப்போதிருந்து இரவு 12 மணி வரை ஸ்வாமி தினமும் பக்தர்களுக்கு காட்சியளிக்கிறார்.

காலை 3–3.30 மணி வரை சுப்ர பாத தரிசனம். 3·30–3·45 வரை "சுத்தி". இப்போது ஸ்வாமிக்கு முன்தினம் அலங்காரம் செய்த மலர்களை நீக்குகிறார்கள், (கோவிலினுள்ளே உள்ள பூலபாவியில் (பூங்கிணறு) போடப்படும்.) 3.45–4.30 வரை 'தோமால சேவை'. தரிசனத்திற்கு நபர் ஒன்றுக்கு ரூ. 100/- இது சமயம் பெருமாளுக்கு புதிய மலர்கள் அணிவிக்கப்படும்.

பிறகு 3.45–4.39வரை 'கொலுவு' இப்போது உற்சவமூர்த்தியான 'மலையப்பரை' அலங்கரித்து முன்தினத்தின் வருமானம் முதலிய கணக்கு வழக்குகள், பஞ்சாங்கம் முதலியன படிக்கப்படும்.4.45–5.40 வரை லட்சார்ச்சனை. நபர் ஒருவருக்கு டிக்கட் ரூ. 100/-.

5.30–6 வரை நைவேத்யம், சாத்துமுறை முதலியன நடைபெறுகின்றன. 6 மணி முதல் 11 மணி வரை சர்வ தரிசனம், ரூ. 25 விசேஷ தரிசனம் முதலியன நடைபெறுகின்றன. மதியம் 11-12 வரை மீண்டும் ஒரு முறை "சுத்தி" நடைபெறுகிறது. நைவேத்யம் முடிந்த பிறகு சிறிது நேரம் ஸ்வாமிக்கு ஏகாந்தம் (ஓய்வு)

மீண்டும் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரை சர்வ தரிசனம், ரூ 25 தரிசனம் நடைபெறுகின்றன. இரவு 7-8 மணி வரை 'சுத்தி', நைவேத்யம், ஏகாந்தம் முதலியன நடைபெறுகிறது. மீண்டும் 10 மணி வரை சர்வ தரிசனம், ரூ. 25 தரிசனம். 10–10.30 வரை மற்றொரு முறை 'சுத்தி' நடைபெறுகிறது. 10.30க்கு பிறகு சர்வ தரிசனத்திற்கு காத்திருக்கும் கூட்டத்தைப் பொறுத்து நள்ளிரவு 12 அல்லது 12·30க்கு பிறகு கூட 'ஏகாந்த சேவை' நடைபெறுகிறது.

தீபாவளி போன்ற விசேஷமான நாட்களில் நள்ளிரவு 2 அல்லது 2-30 வரை சர்வ தரிசனம், ஏகாந்த சேவை நடைபெற்று, சம்பிரதாயத்திற்காக 30 நிமிடம் மட்டும் கோவிலை மூடி விட்டு மீண்டும் 3 மணிக்கே அடுத்த நாள் சுப்ரபாத தரிசனம் ஆரம்பித்து விடும்.

புதியதாக மிக நவீன முறையில் அரை வட்ட வடிவமுள்ள, 2 மாடிகளையுடைய ஒரே கட்டடத்தில் 34 அறைகளில் (ஹால்கள்) 15,000 பேர் வசதிகளுடன் அமரக்கூடிய பிரம்மாண்டமானக்யூகாம்பலக்ஸ் 1.5 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டு உள்ளது. இந்தியாவில் வேறெங்கும் இத்தகைய ஒரு கட்டிடம் இல்லாத வாறு மிகச் சிறப்பான முறையில் ECC கட்டி உள்ளது.

திருமலையில் பெருமானுககு அடுத்தபடியாக புகழ் பெற்று விளங்குவது லட்டு வடை பிரசாதம் தான். தினமும் சராசரி 30-35 ஆயிரம் லட்டு வடைகள் செய்யப்படுகின்றன. ஆனாலும் இவற்றுக்கு பெரும்பாலான நாட்களில் தட்டுப்பாடு தான். தீபாவளி முதலிய விசேஷ நாட்களில் 1 லட்சத்திற்கும் அதிகமான லட்டு வடைகள் கூட போதாது. திருமலைக் கோவிலில் மட்டுமின்றி தற்போது திருப்பதி கோவிந்தராஜ ஸ்வாமி கோவிலிலும் லட்டு விற்கப்படுகிறது.

திருமலை கோவில் பிரசாதங்கள் அனைத்தும் அசல் நெய்யினால் செய்யப்படுபவை. விஜயவாடா பால் பண்ணையிலிருந்து லாரி லாரியாக நெய் வருகிறது. தினமும் மூட்டைக் கணக்கில் முந்திரி, பாதாம், திராட்சை, ஏலக்காய் முதலியன பயன்படுத்தப் படுகிறது. இதனால்தான் கோவிலினுள்ளே பக்தி மனத்துடன் பிரசாதங்

களின் மணமும் போட்டி போடு கிறது.

திருமலைக்கோவிலில்மிகவும் குறைந்த பணம் செலவாகும் சேவை விசேஷ நுழைவு தரிசனம், சுப்ரபாத தரிசனம் முதலியவற்றுக்கு ரூ. 25தான். ஆனால் நித்ய லட்டு தானம், உதயாஸ்தமன சேவை முதலியவற்றுக்கு கட்டணம் ஒரு லட்சம் ரூபாய். முதலில் கூறிய சேவையானது நாம் கொடுக்கும் லட்ச ரூபாய்க்கு ஒரு வருடம் வரும் வட்டித் தொகையிலிருந்து ஒவ்வொன்றும் 25 கிராம் எடையுள்ள லட்டுகளை நாம் விரும்பும் தினத்தில் பக்தர்களுக்கு இலவசமாக வழங்குவார்கள்.

உதயாஸ்தமன சேவையானது நாம் விரும்பும் ஒரு நாளில் கோவிலின் எல்லா சேவைகளும் நமது செலவில் செய்யப்படும். இதே சேவையை வெள்ளிக்கிழமை அன்று செய்ய 3 லட்சம் ரூபாய் வங்கியில் நிரந்தரமாக டிபாஸிட் செய்ய வேண்டும்.

திருமலைக் கோவிலில் கொண்டாடப்படும் உற்சவங்களுள் தலையானது 'பிரம்மோற்சவம்' ஆகும். திருமலையில் 10 நாட்கள் காலையும் மாலையும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. 5ம் நாள் 'கருட சேவை', அன்று மூல விக்ரஹத்தை அலங்கரிக்கும் பழம் பெரும் நகைகளான 'மகர காந்தி யையும்', 'லட்சுமி ஹாரத்தையும்' உற்சவமூர்த்தியான மலையப்பருக்கு அணிவிக்கப்பட்டு உற்சவர் உலா வருவார், 9ம்நாள் 'ரதோற்சவம்', 10ம் நாள் 'சக்ர ஸ்நானம்'.

இது தவிர பவித்ரோத்ஸவம், வசந்தோற்சவம் முதலிய பல உற்சவங்களும் நடைபெறுகிறது. பிரதி வியாழக்கிழமை இரவும் 'பூலங்கி சேவை' நடைபெறுகிறது.

இது சமயம் ஸ்வாமியின் விக்ரஹத்திற்கு எந்த வித நகைகளையும் அணிவிக்காது மலர்கள் மட்டுமே அணிவிக்கப்படுகின்றன. எப்போதும் பெரிதாக காணப்படும் திருநாமமானது சிறியதாக்கப்படுகிறது.

ஒவ்வொரு நாள் இரவும் ஏகாந்த சேவைக்குப் பிறகு பிரம்மாவும் மற்ற தேவதைகளும் ஒவ்வொரு நாளும் ஸ்வாமியை ஆராதனை செய்ய வருவதாக ஐதீகம். அதனால் தினமும் ஸன்னதியை மூடுவதற்கு முன்பு ஸ்வாமியின் பூஜைக்கு தேவைப்படும் எல்லா பொருட்களும் கர்பக்கிருஹத்தில் வைக்கப்படுகிறது. பிறகு அடுத்த நாள் அதிகாலையில் நடக்கும் விஸ்வரூப தரிசனத்தின்போது பக்தர்களுக்கு பிரசாதமாக வழங்கப்படுகிறது.

திருமலைக்கு வரும் எல்லா பக்தர்களுக்கும் தேவஸ்தான மருத்துவ மனையில் இலவசமாக சிகிட்சை அளிக்கப்படுகிறது. தேவஸ்தானம் நடத்தும் கூட்டுறவு அங்காடியில் சகாயமான விலையில் எல்லா உணவுப் பொருட்களும் விற்கப்படுகின்றன. தேவஸ்தானம் மிகப் பெரிய உணவு விடுதியும் நடத்துகிறது.

திருமலையில் எல்லா காட்டேஜ்கள் இருக்கும் பகுதிகளுக்கு மத்திய பஸ் நிலையத்திலிருந்து பக்தர்கள் பயணம் செய்ய தேவஸ்தானத்தினர் இலவச பேருந்து வண்டிகளை ஓட்டுகிறது. திருமலையில் மொத்தம் 18 புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன. கோவிலின் வடக்கே 1 கி.மீ. தூரத்தில் இயற்கையாகவே தோரண வடிவமுடைய கற்பாலம் ஒன்றும் இருக்கிறது. (Geological Arch)

திருமலையிலும், திருப்பதியிலும் தேவஸ்தானம் அரும்பொருட் காட்சியகங்களை நடத்துகிறது. திருமலையில் கோவிலுக்கு எதிரே உள்ள ஆயிரங்கால் மண்டபத்திலும், திருப்பதியில் கோவிந்தராஜ ஸ்வாமி கோவிலுக்கு வடக்கேயும் மிக அருமையான முறையில் இவை பராமரிக்கப்பட்டு வருகின்றன. அவை வரது கண்ணையும் கருத்தினையும் கவர்கின்றன. (கட்டணம் 1 ரூ. மட்டுமே.)

திருப்பதியில் கோவிந்த ராஜர் கோவில், கோதண்டராம ஸ்வாமி கோவில் உள்ளன. திருப்பதி - சித்தூர் சாலையில் 11 கி. மீ. தூரத்தில் ஸ்ரீனிவாச மங்காபுரத்தில் கல்யாண வேங்கடேஸ்வரர் கோவில் இருக்கிறது. மேற்கூறிய எல்லா கோவில்களைத் தரிசிக்க தேவஸ்தானம் தனி பஸ் ஒன்றை நடத்துகிறது. கோவிந்த ராஜ ஸ்வாமி சத்திரத்திலிருந்து புறப்பட்டு 4-5 மணி நேரத்தில் திரும்பி விடலாம். நபர் ஒன்றுக்கு கட்டணம் ரூ. 12/- தான். (விசேஷ தரிசனம் உட்பட)

நாராயணவனத்தில் கல்யாண வேங்கடேஸ்வரர் கோவிலும், நாகலாபுரத்தில் வேத நாராயண ஸ்வாமி கோவிலும் உள்ளன. திருக் காளஹஸ்திக்கும், திருத்தணிக்கும் நிறைய தனியார் பேருந்துகள் போய் வருகின்றன.

வருடா வருடம் கோடிக் கணக்கான ரூபாய் வருமானம் வருகிறது. வருமானத்தில் 20% உண்டியலில் மட்டுமே கிடைக்கிறது. மற்றொரு கணிசமான பகுதி பிரசாத விற்பனையிலிருந்து கிடைக்கிறது. தரிசனம் மற்றும் சேவை டிக்கெட் விற்பனை, காட்டேஜ் வாடகைகள் என்று பல வழிகளில் கோடிக்கணக்கில் வருமானம் வருகிறது.

6 கோடி ரூபாய் செலவில் ஸ்வாமிக்கு புதிய வைரக் கிரீடம் செய்ய ஆரம்பித்துள்ளனர். திருப்பதிக்கு அருகிலுள்ள சந்திரகிரியிலிருந்து திருமலைக்கு 'Rope way' போட ஜப்பானிய நிறுவனத்துடன் பேச்சு வார்த்தை நடந்து கொண்டு இருக்கிறது. தேவஸ்தானத்தில் சுமார் 6,500ஊழியர்கள் பணி புரிகிறார்கள்.

●

# ஓணம் பண்டிகை

திரு. பி. சுந்தரராமன் எம்.ஏ.பி.எட்.,
பழமார்னேரி.

உலகிலேயே முதன் முதலில் தோன்றியது நீர் நீரிலே வாழும் இயல்புடையது மீன். நம் பெருமானின் முதல் அவதாரமும் மத்ஸ்யாவதாரம். நீரினின்று வெளி வந்ததே நிலப்பகுதி. ஆமை நீரிலும் வாழும், நிலத்திலும் வாழும். எனவே இறைவனின் இரண்டாம் அவதாரம் கூர்மாவதாரம். பரமன் எடுத்த மூன்றும் அவதாரம் வராஹம். அது நிலத்திலேயே வாழும் இயல்புடையது. நான்காவதாய்த் தோன்றிய நரசிம்மம் மனிதனும் மிருகமும் சேர்ந்தது. ஐந்தாவது அவதாரமாகிய வாமனமூர்த்தியே முழு மனித உருவம் கொண்டவர். இவ்வையகத்தின் வளர்ச்சியிலே,நாகரிகத்திலே ஐந்தாவது படி இது. எனவே உலக நாகரிக வளர்ச்சியும், அவதார வளர்ச்சியும் தம்முள் பிணைந்து ஒன்றுக் கொன்று ஒத்திருத்தலைக் காண்கின்றோம்.



ஸ்ரீவாமன சரித்ரத்தைப் பரம பாகவதர்களான மேப்பத்தூர் ஸ்ரீமந் நாராயண பட்டதிரிகள் தம் நாராயணீயத்தில் சொல்லத் தொடங்கும் போது,

" சக்ரேண ஸம்யதி ஹதோபி பலிர் மஹாத்மா
சுக்ரேண ஜீவிததனு: க்ரதுவர்த்தித-தோஷ்மா ।
விக்ராந்திமான் பயநிலீன ஸுராம் த்ரிலோகீம்
சக்ரே வசே ஸ தவ சக்ர முகாத பீத: ॥

என்றவாறு ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்துக் கேட்டுவிட்டுத்தான் ஆரம்பிக்கின்றார். "இந்த்ராதி தேவர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற்று மிகுந்த பலத்தை யடைந்து செய்த போரில், பரமபாகவதனான பிரஹ்லாதாழ்வானின் பேரனான மஹாபலியும் கொல்லப்பட்டான். ஆனாலும் சுக்ராசாரியாரினால் உயிர் பெற்று விச்வஜித் போன்ற யாகங்களைச் செய்து மிகுந்த பராக்ரமத்தை அடைந்து தங்களுடைய சக்ராயுதத்திற்கும் பயம் அற்றவனாக இருந்து கொண்டு மூவுலகங்களையும் வசமாக்கிக் கொண்டானாமே! குருவாயூரப்பா!' என்று பட்டதிரி கேட்க, ஸ்ரீ அப்பனும் 'ஆம்' என்று தலையசைத்து அங்கீகரித்தாராம்.

இவ்விதம் சுக்ராசாரியார் செய்து வைத்த விச்வஜித் யாகத்தின் மூலம் தங்கத் தேரையும், இந்திரனின் குதிரை போன்ற குதிரைகளையும், ஸிம்ஹத்தின் உருவம் பொறிக்கப்பட்ட கொடியையும் ஹவிஸ்ஸுகளின் மூலம் ஸந்தோஷமடைந்த அக்னியிடமிருந்து பெற்றுக்கொள்கிறான். திவ்யமான வில், வற்றாத அம்புறா துணி,கவசம் இவற்றைப் பல தேவதைகள் தருகின்றன. பிரம்மதேவன் மஹாபலிக்கு வாடாத புஷ்பமாலையையும், சுக்ர பகவான் சங்கையும் கொடுக்கின்றனர். பின்னர் மஹாபலி தன் பாட்டனாரான பிரஹ்லாதனையும் நமஸ்கரித்து அவரிடம் வரம் பெற்றுக் கொண்டு இந்திர ஸாம்ராஜ்யத்தைக் கைப்பற்றக் கிளம்புகிறான். உடனே இந்திராதி தேவர்கள் தேவ குருவான பிரஹஸ்பதியுடன் நன்கு கலந்து ஆலோசித்துக் கொண்டு வெவ்வேறு உருவங்களுடன் ஓடி மறைகின்றனர். இதனையே ஸ்ரீமத் பாகவதம்,

" ஏவம் ஸுமந்த்ரிதார்த்தாஸ் தே குருணார்தானுதர்சினா
ஹித்வா த்ரிவிஷ்டபம் ஜக்மு: கீர்வாணா: காமரூபிண: "

என்று கூறுகிறது. தேவ மாதாவான அதிதி தன் குழந்தைகளின் இந்தப் பரிதாபமான நிலைகண்டு வருந்து

கிறாள். உடனே கச்யபர் மஹா விஷ்ணுவின் அருளைப் பெறுவதற்கு ஸாதனமான பயோவ்ரதம் என்ற விரதத்தை உபதேசிக்கிறார். அதிதியும் பன்னிரெண்டு நாட்கள் அந்த விரதத்தை உள்ளந்தரங்கத்துடன் செய்து மஹாவிஷ்ணுவைப் பூஜிக்கிறாள்.

இதே சமயத்தில் இந்திரனிடமிருந்து மண்ணையும், விண்ணையும் பறித்து ஆண்டு வரும் மாவலியின் கரங்கள் கொடுத்தே பழக்கப்பட்டவையாதலின் எவருக்காகிலும் எதனையாவது கொடுக்கத் துடிக்கின்றன. அதன் காரணமாக வானவரும் ஆற்ற இயலாத நெய்தவழ் வேள்வி ஒன்று ஆற்ற நினைத்துச் செயல்படுகின்றான். இதன்மூலம் இந்தப் பரந்த பூவுலகத்தையே பூதானம் செய்துவிட எண்ணுகிறான். இதனையறிந்த இந்திராதி தேவர்கள் அவ்வேள்வியாற்றினால் மாபெரும் சக்திகளும்கூட மாவலியை வந்து தஞ்சமடையுமே என்று எண்ணித் திருமாலைச் சரணமடைகின்றனர்.

தேவர்களின் தாயான அதிதியும் இதே நேரத்தில் பயோவ்ரதத்தை சிரத்தையுடன் செய்து முடிக்கிறாள். ஸ்ரீபகவானே நீலமேகச்யாமள வர்ணம், நான்கு கைகள், கருணையுள்ளம் அந்த உள்ளத்தின் பிரதி பிம்பமான சுந்தரவதனம் இவற்றுடன் தோன்றி அதிதிக்கு தரிசனம் தருகிறார். அதிதி பகவானைப் பலவாறும் ஸ்துதிக்கிறாள். பின்பு அதிதியின் கர்ப்பத்தில் பிரவேசித்து சங்கம், சக்ரம் இவற்றுடன் கூடிய வைஷ்ணவ திவ்ய ரூபத்துடன் கூடி த்வாதசியும், ச்ரவண நக்ஷத்திரமும் கூடிய புண்ய தினத்தில் அவதாரம் செய்கிறார்.

எம்பெருமான் இவ்விதம் கசியபர், அதிதியின் குலக்கொழுந்தாகப் பிறந்தவுடன், கசியபர்-அதிதி ஆகிய இருவருமே ஸ்துத்யம் செய்கின்றார்கள். தேவர்கள் தூரிய வாத்யங்களை முழக்கிப் புஷ்பமாரி பொழிகின்றனர். நர்த்தனம் முதலிய கேளிக்கைகளைச் செய்து அரம்பையர் ஸந்தோஷிக்கின்றனர். கச்யபரும் அதிதியும் இவ்விதம் ஸ்துத்யம் செய்து கொண்டிருக்கும் போதே குழந்தை ஒரு அழகான பிரம்மசாரியாக மாறி விடுகிறது.

வாமன மூர்த்தியான பகவானுக்கு உடனேயே உபநயனமும் செய்விக்கப்படுகின்றது. இது பாகவதத்தில் மிகவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. காயத்ரி மந்திரத்திற்கு அதிதேவதை ஸூர்யன் ஆனபடியால் ஸூர்ய பகவான் வாமனனுக்கு காயத்ரி மஹா மந்த்ரத்தை உபதேசம் செய்கிறார். பிரம்மனுடைய செல்வமெல்லாம் அவனுடைய தபோசக்திதான். அதை அடக்கி வைத்திருப்பது பிரம்ம ஸூத்ரம் எனப்படும் பூணூல்தான். இதை தேவ குருவான பிரஹஸ்பதி தருகிறார். பிதாவான கச்யபர் பிரஜாபதி முஞ்சிக் கயிற்றை இடுப்பில் கட்டுகிறார். பூமிதேவி மான் தோலைப் போர்த்துகிறாள். வனஸ்பதியான சந்திரன் வாமனருக்குப் பலாச தண்டத்தை யளிக்கிறான். தாயான அதிதி கௌபீன வஸ்த்ரத்தையளிக்கிறாள். மேலுலக தேவதை குடையைக் கொடுக்கிறது. வேதத்தின் இருப்பிடமான ப்ரஹ்மதேவன் கமண்டலு என்ற ஜலபாத்ரத்தையும், ஸப்த ரிஷிகள் குசமென்ற தர்ப்பைப் புல்லையும் தருகின்றனர். பிரம்மசாரி ஏழையானாலும் செல்வந்தரானாலும், பிக்ஷை வாங்கித்தான் புசிக்க வேண்டும். இந்த நியமத்தால் அஹங்கார மமகாரங்கள் அழிவதாகப் பெரியோர் கூறுவர். வேத தத்துவத்தையறிய இவை உதவாது. எனவே அதைப் போக்கவே மேற்கண்ட நியமம். எனவே பிக்ஷைக்குரிய பிக்ஷா பாத்ரத்தைக் குபேரன் அளிக்கிறான். பிரம்மசாரியானவன் முதன் முதலில் பிக்ஷை கேட்கும்போது 'இல்லை' என்ற சொல்லை அவன் கேட்கக் கூடாது. முதல் பிக்ஷையைப் பார்வதி தேவி அளிக்கிறாள். மாவலியின் வேள்விச் சாலையினை நோக்கி பிறகு வாமனன் செல்கின்றான். ஸ்ரீமத் பாகவதம் "வாமனமூர்த்தி ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்



திருவெண்காடு சிவஸ்தலம், திரு. வி. முத்துராயன்-கோவை.

போதும் அவருடைய பாரத்தால் பூமி வளைந்து கொடுத்து வணங்கிற்று'' என்பதனை,

'' ஜகாம தத்ராகில ஸாரஸம்ப்ருதோ
பாரேண காம் ஸன்னமயன் பதே
பதே''
(பாக (8-18-20)

என்று கூறுகின்றது. ஸ்ரீமத் நாராயணீயத்தில் நாராயண பட்டதிரியும் ஸ்ரீ குருவாயூரப்பனை வாமன மூர்த்தியாகக் கண்டு கவிதா ரஸத்தினால் மனம் பூரித்து விடுகிறார்-

'' சத்ரம் பரோஷ்மதிரணார்த்த
மிவாத தாரோ
தண்டம் சதானவ ஜனேஷ்வி
ஸன்னிதாதும்''

என்றபடி ஸ்ரீவாமனமூர்த்தி குடையைப் பிடித்துக் கொண்டிருந்த காட்சி அஸுரர்களின் பராக்ரமத்தை மறைத்துவிட்டது போல் இருந்தது என்றும், கையில் இருந்த பலாச தண்டம் அஸுரர்களை தண்டிப்பதற்காகவோ? என்றும் மிகவும் ஸூக்ஷ்மமாகக் கற்பனையில் திளைக்கின்றார் பட்டதிரி.

யக்ஞ சாலையை அடைந்த வாமன மூர்த்தியை மகாபலி எதிர்கொண்டழைத்து வரவேற்கிறான். விதிப்படி உபசரித்து அமரச் செய்து அவன் சரண கமலங்களை அலம்பி அதனை தன் சிரசில் தெளித்துக் கொள்கிறான்.

மஹாபலி வாமனனின் ப்ரம்ம தேஜஸில் மயங்கி விட்டான். இதனால் அதிக பக்தியும் அன்பும் மேலிட்டவனாக, வீடு, பூமி, அன்னம் முதலியவை என்ன வேண்டுமானாலும் அந்த பிராம்மண குமாரனுக்குத் தானமாக அளிக்கிறேன் என்கிறான். பதிலுக்கு வாமனன் ''மூவடி மண் அருள், உண்டேல்'' என்று பதிலளிக்கிறான். தனது சின்னஞ் சிறிய கால்களால் அளந்து கொள்ள மூன்றடி மண்ணினை மட்டும் யாசிக்கிறான். வாமனன் இவ்விதம் கேட்டு முடிப்பதற்குள்ளாகவே 'தந்தனன்' என்று கூறி முடித்து விடுகிறான் மாவலி. நடந்தவை அனைத்தையும் அருகில் இருந்தவாறே உற்று நோக்கி உணர்ந்த அசுர குருவான சுக்ராச்சாரியார் வந்தவன் வாமனன் அல்லவென்றும், அண்டமெல்லாம் உண்டு நின்ற மாயவன் என்றும் மாவலியிடம் கூறி பூதானம் செய்வதிலிருந்து தடுக்கிறார். ஆனால் திருமாலே தன்னிடம் இரந்து வந்திருப்பதை தான் பெற்ற பெறற்கரிய பேறாக மாவலி கருதுகிறான். இறைவன் கரம் கீழும் தன் கரம் மேலும் இருப்பதைவிட தனக்கு வேறு என்ன பாக்யம் உண்டு என்றும் விவாதிக்கிறான்.

இவ்விதம் குருவின் கட்டளையையும் மீறி மனைவி விந்தியாவளி நீர் வார்க்க மாவலி தானம் செய்யும் சமயத்தில் சுக்ராச்சாரியார் அந்த நீர் பாத்திரத்தின் மூக்குப் பகுதியில் வண்டு உருவமெடுத்து அமர்ந்து நீர் வராமல் தடுத்து விடுகிறார். இதை உணர்ந்த வாமனன் புன்சிரிப்புடன் அருகிலிருந்த ஒரு தருப்பை புல்லால் அந்த துவாரத்தை குத்தியதால் சுக்ரனின் ஒருகண் கெட்டுப் போகிறது.

நீரினை மாவலி விட்டதுதான் தாமதம், ஒன்றன்பின் ஒன்றாகப் பல செயல்கள் நடக்கத் தொடங்குகின்றன. வாமனன் பேருருக் கொள்கிறான். வாமனாவதாரம் முடிவடைந்து திரிவிக்ரம அவதாரம் தொடங்குகிறது.

திரிவிக்ரமனின் திருஉருவம் பிரும்மாண்டத்தை எல்லையாக வைத்துக் கொண்டு வளரத் தொடங்கியது. மண்ணை அளப்பதற்குத் திரிவிக்கிரமன் தன் திருத்தாளை நீட்டியதும் விண்ணும் மண்ணும் நடுங்கத் தொடங்குகின்றன. வடிவம் நீண்டு கொண்டே போகிறது. திக்கெட்டும் அளக்கப் பரவுகின்றன திருத்தோள்கள். திருமுடி மேலுலகு அளக்கப் புகுகிறது. திருவடியிட்டு அளக்கப் புகுங்கால் மாவலியின் மைந்தன் நமுசி, வளரும் திருவடிகளைக் கண்டு திகைத்து இறைவனது திருப்பாதங்களைப் பற்றிக் கொள்கிறான் ''முன்னைய வண்ணமே திருந்து வடிவம் கொண்டு அளந்து செல்'' என்று இறைவனிடம் கூறுகிறான். இறைவன் வளர்ந்த தன் திருவடியினால் அவனை வானத்தில் கொண்டு சுழற்றி எறிகிறான். இதனைத் தன் அகக் கண்ணால் கண்டுகளிக்கிறார் பெரியாழ்வார்.

'' எண்ணினது மாயம் என்னப்பன்
அறிந்திலன்
முன்னைய வண்ணமே அளவாய்
என்ன
மன்னு நமுசியை வானில் சுற்றி''

என்று இறைவன் செய்கையைப் பாராட்டுகின்றார்.

வாமனமூர்த்தி உலகமனைத்தையும் தன் தேகமானது வியாபித்துக் கொள்ள மண்ணுலகை ஓர் அடியால் அளந்து கொள்கிறார். இரண்டாவது திருப்பாதம் சத்யலோகம் வரை எட்டுகிறது. பிரம்மன் அந்த பாதத்தை அலம்பி பூஜிக்கிறார். அது ஆகாச கங்கையாக பிரவகித்து பூமியில் விழுந்து நம் பாரதத்தை புனிதமடையச் செய்கிறது.

உலகமளந்து நின்ற திருவிக்ரமனை ஜாம்பவான் சுற்றிச் சுற்றி வந்து தான் சுமந்திருக்கும் பேரி என்னும் முரசு வாத்யத்தில் முழக்கி இறைவன் பெருமைகளைப் பாடுகிறார்; இதனை நாராயண பட்டதிரி தம் நாராயணீயத்தில் (31-7)

'' பேரீம் நிக்னன் புவன மசரஜ்ஜாம்-
பவான் பக்திசாலீ''

என்பார்; எனவே ஜாம்பவான் வாமனாவதாரம் முதல் இராமாவதாரம் முடிந்தும் கிருஷ்ணாவதாரம் வரை ஜீவித்து கிருஷ்ணனுக்குத் தன் பெண் ஜாம்பவதியை மண முடித்தவர்.

இவ்விதம் இரண்டடிகளை அளந்து முடித்த மஹாவிஷ்ணு மேலும் அளக்க ஒன்றும் இல்லாமையால் தன் திருவடியை திருப்புகிறார். மாவலியோ தன் அகந்தை ஒடுங்கி மூன்றும் திருவடிக்கு தன் முடியினையே நீட்டி வணங்குகிறான். மாவலி இவ்விதம் தலை வணங்கியதும் பகவான் தன் பாதத்தை அவன் தலையில் வைத்து அழுத்திப் பாதாள லோகத்திற்கு அனுப்பியதாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆனால் ஸ்ரீமத் பாகவத்திலோ அல்லது ஸ்ரீநாராயணீயத்திலோ பகவான் தன் காலை மஹாபலியின் தலையில் வைத்து அழுத்தியதாகக் கூறப்படவேயில்லை. ஸ்ரீசுகரும் ஸ்ரீநாராயண பட்டதிரியும் மஹாபாகவத சிரோன்மணியாகிவிட்ட மஹாபலியின் தலையில் பகவான் தன் பாதத்தை வைத்து அவனைத் தண்டித்தார் என்று சொல்வதற்கு அதைரியப்படுபவர்களே போல் அந்த விஷயத்தை எழுதாமலே விட்டுவிட்டார்கள் போலும்!

மஹாபலிக்கு பகவான் ஸுதலம் என்ற புண்யலோகம் சிருஷ்டித்து அங்கு அவனைத் தன் சுற்றத்தார்கள் பரிவாரங்களுடன், ஸகல க்ஷேமங்களுடன் வாழும்படி செய்கிறார். அவனுடைய புண்யத்திற்கு அதுமட்டும் போதாது என்று எண்ணி, அந்த மாவலியின் அரண்மனையிலேயே வாயிற்காப்போனாகவும் அமர்ந்து சேவை புரிகிறார். இவ்விதம் மாவலிக்குத் துணையாகத் தானுமே தங்கிவிடுகிறார் மஹாவிஷ்ணு.

இவ்விதம் திருமால் வாமனனாக அவதரித்து திருவிக்கிரமனாகி பாரெல்லாம் அளந்து மாவலிக்கு பண்பு புகட்டி அவனுக்கு நித்யானந்த சாம்ராஜ்யத்தை சிருஷ்டித்துத் தந்த தினமே ஆவணி மாதத்தில் வரும் ஓணம் பண்டிகையாகும். கேரளத்தில் இது சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இந்த ஓணப் பெருநாளில் வாமனன் சரிதை கேட்டு இன்புற்று நாமும் வளம்பல பெறுவோமாகுக!

★

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

8

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

### ஸ்ரீராமாநுஜவிக்ரஹ ப்ரதிஷ்டையும் இராமாநுசநூற்றந்தாதி ஸேவித்தலும்

இனித் திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் ஸ்ரீராமாநுஜரின் அர்ச்சாமூர்த்தியாகிய திவ்யமங்கள விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய்தல் அவரைப் பற்றிய பிரபந்தத்தை அநுஸந்தித்தல் ஆகிய இவற்றின் வரலாறு கூறப்படும்.

இங்ஙனம் ஸ்ரீராமாநுஜரின் திருவாணையை அனுசரித்துத் திருவேங்கடமலையாகிய திவ்யதேசத்தில் தரும காரியங்கள் அனைத்தும் குறைவின்றி நடத்தப்பட்டு வருமளவில், ஒருசமயம் ஸ்ரீராமானுஜரின் அவதாரமுடிவை ஒரு வைஷ்ணவர் கூறக் கேட்ட அனந்தாழ்வான் மிக மிகக் குழம்பிய மனத்தராய், தகப்பனாரைக் குறித்துத் தனயன்போல ஒரு வருஷகாலம் துக்கதீக்ஷைகொண்டு ஸ்ரீராமாநுஜநந்தவன கைங்கரியத்தையும் கவனியாமலும் திருவேங்கடமுடையானையும் ஸேவியாமலுமே இருந்தார்.

அப்போது திருவேங்கடமுடையானும் எல்லையில்லாத் துன்பத்தை அடைந்து பரமகருணையுடன் அனந்தாழ்வானை அழைத்துவரும்படி அர்ச்சகர் வாயிலாக ஒரு தூதனை நியமிக்க, அவனால் வருந்தியழைத்துச் செல்லப்பட்ட அனந்தாழ்வான் கோவிலையடைந்தவராய்ப் பெருந்துன்பக்கடலில் மூழ்கி முகத்தை நிமிர்த்தாமல் கவிழ்த்துக்கொண்டே நிற்க, பகவான் 'வாரீர் அனந்தாழ்வானே நானன்றோ ராமாநுஜமுனியாகிய ஒரு பெரிய நிதியை இழந்துவிட்டேன். உமக்கு அவருடைய ஸ்தானத்திலே நானே இருக்கிறேன். வருந்தாதீர். உமக்குக் குறையேதும் வாராது. உமது விருப்பம் அனைத்தையும் நானே நிறைவேற்றுகிறேன்' என்று மிக்க ஆதரவோடு தேற்றரவு கூறி, எப்போதும் (அர்ச்சனைசெய்யப்பட்ட) மலர்த்தொகுதியோடு சேர்ந்தேயிருப்பதனால் கும்கும்மென்று மணம்வீசப்பெற்ற தனது திருவடியிணை ஸ்ரீசடகோபன் தீர்த்தம் பிரசாதம் முதலியவற்றை அளித்துக் கௌரவிக்க, அவற்றைப் பெற்ற அனந்தாழ்வான் சிறிது முகம்நிமிர்த்துத் திருவேங்கடமுடையானுடைய சந்திரமண்டலம் போன்ற திருமுகத்தை ஸேவித்தவராய், 'பகவானே திருவேங்கடநாதனே ஸ்ரீநிவாஸா ஸ்ரீராமாநுஜமுனிவரைப்பற்றி அடியேன் செய்யும் இவ்விண்ணப்பத்தைத் தேவரீர் நிறைவேற்றிவைக்கவேணுமாய் வேண்டுகிறேன்' என்று விண்ணப்பம் செய்தார்.

பின்பு பகவானால் உமது கோரிக்கையைக் கூசாமல் கூறுமென்று சொல்லப்பட்ட அனந்தாழ்வான், ''பிரகிருதிமண்டலத்திற்கு மேலுள்ள பரமபதத்தில் வாழ்பவன், சங்குசக்கரம் கதை ஆகியவற்றைத் தாங்குமவனாய் அனைவரையும் போஷிப்பவன்' என்று பரம்பொருளாவதற்கு முக்கிய லக்ஷணங்களாகச் சொல்லப்பட்ட சங்கு சக்கரங்களைக் கலியுகாரம்பத்தில் பரமகருணையுடன், தொண்டைமான் சக்கரவர்த்தியென்னும் ஒரு பக்தன் வெல்லுவதற்கு அரிய பகைவர்கூட்டத்தைக் கண்டு அச்சங்கொள்ள, தேவரீர் அவனுக்கு அப்பகைவர்களை அழிப்பதற்காகக் கொடுத்தருளினீர்.

தேவரீரது அத்தகைய இப்பெருவள்ளல்தன்மையாகிய நற்பண்பை அறியாத மூடர்களான இவ்வுலகத்தவர், தேவரீர்க்கே உரிய சங்கு சக்கரங்கள் தேவரீரிடம் தென்படாமையால் தேவரீரை வேறுதெய்வமாக மயங்கி மதிகேடரானார்கள். அவர்கள் உள்ளபடியே தேவரீரிடம் பரம்பொருளாந்தன்மையை அறிந்து அதன் மூலமாக முக்தியடைவதன் பொருட்டு, சைவஜனங்களின் பொருளற்ற கோலாஹலத்தை ஓயச்செய்து பெருமுயற்சியுடன் யாதவராஜனையும் நல்வழிக்குக் கொண்டுவந்து முன்புபோல் சங்கு சக்கரங்களைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளும்படி ராமாநுஜமுனிவரன்றோ செய்தருளினார்.

இவ்வாறே குற்றம் சிறிதுமின்றி நற்குணக் கூட்டங்களுக்கு நிதியான தேவரீர்திறத்தில் குணமின்மை முதலிய குற்றங்களைக் கூறுகின்ற—வேதத்துக்குப் புறம்பானவர்களையும் வேதத்திற்குக் கெட்டநோக்கங்கொண்டு அவப்பொருள் கூறுமவர்களையும் மறுப்பதற்காக, தேவரீரை மூவகைப்பட்ட சேதந அசேதநங்களினுடையவும் (உயிர்களுடையவும் மற்ற அறிவில்லாப் பொருள்களினு

ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு.

டையவும்)உருவம் தருமம் செயல் ஆகியவற்றைத் தமக்கு வசமாகப் பெற்றவராகவும் எல்லாவுலகின் படைப்பு காப்பு அழிப்பு ஆகிய இவற்றை விளையாட்டாக உடைய வராகவும் எல்லாவேதாந்தங்களா லும் கூறப்படுமவராகவும் குற்ற மனைத்துக்கும் பகையாய் அறிவும் ஆனந்தமுமே உருவமாக உடையவ ராகவும் அப்ராக்ருத (பரமபதத்திய பஞ்சபூதமயமான) திவ்விய திரு மேனியோடு கூடியவராகவும் நற் பண்புகளின் தொகுதிகளை இயற்கை யாகப் பெற்றவராகவும் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் கேள்வ ராகவும் பிரமன் உருத்திரன் முத லானவர்களால் தஞ்சமடையத்தக்க வராகவும் இவ்வுலகம் பரமபதம் என்னும் இரண்டு விபூதிகளையும் (தம் கீழ் அடங்கி நடக்கும் உலகங் களையும்) பராமரிப்பவராகவும் நித் தியசூரிகளாலும் முத்தியடைந்தவர் களாலும் அனுபவிக்கத்தக்கவராக வும் எல்லா உபநிடத வாக்கியங்க ளைக் கொண்டு பொருத்தமாக மூத லித்துக் காட்டி ஸ்ரீபாஷ்யம் முத லான நூல்களை இயற்றி உண்மை யான அறிவை உண்டாக்கி இவ்வுல கோரைக் கருணையுடன் இவ்விராமா நுச முனிவரன்றோ காப்பாற்றினார்.

ஆகையால் உலகனைத்துக்கும் பேருதவி புரிந்த பகவத்ராமாநுஜ முனிவரின் குணகணங்களைப் பற்றிய தும் பிரபந்ந காயத்ரி என்ற பெய ரால் பிரசித்திபெற்றதும் நூற்றெட் டுப் பாசுரங்களை உருவமாகவுடைய தும் ராமாநுச நூற்றந்தாதி என்று மறுபெயர் கொண்டதுமான திரு வரங்கத்தமுதனார் அருளிய பிரபந் தத்தையும் திருவத்யயனோத்ஸவத் தில் தனியாக ஒருநாளில் கேட்டரு ளவேணும் என்றும்,

ஆழ்வார்கள் திருமலையேறித் தேவரீரைப் பல்லாண்டுபாடாத குறைதீர எப்போதும் தேவரீருக்கு இடைவிடாமல் ஸ்ரீராமாநுஜமுனி வரின் மங்களாசாஸனம் உண்டாவ

# பாதந்தனைப் பணிந்தால்...

**திரு. கி. அரங்கசாமி எம்.ஏ., — பட்டாம்பி.**

வெள்ளைநிறத் தண்கடலில் விரித்த பாம்பணைமேல்
பள்ளிகொள்ளு மெங்கள்பிரான் பாதந்தனைப் பணிந்தால்
எண்ணறிய செல்வங்களும் ஏற்றமிகு பெருவாழ்வும்
நண்ணியுடன் வந்தடையும் நானிலத்தோர் நலம்பெறவே.

பார்த்தனுக்குப் போர்க்களத்தில் கீதையினை ஓதுவித்த
பங்கயற்கண் அண்ணலவன் பாதந்தனைப் பணிந்தால்
தொல்லைவினை முதலான துன்பமெலாம் போயகலும்
எல்லையிலா இன்பங்களும் நன்மைகளும் வந்தணையும்

தீதுதனை இல்லையெனச் செய்திடவே மேதினியில்
பத்துமுறை அவதரித்தோன் பாதந்தனைப் பணிந்தால்
எண்ணுகின்ற எண்ணமெலாம் இனிதுடன் நிறைவேறும்
நண்ணும் கலைகளும் ஞானமும் மேம்படுமே.

கண்கண்ட தெய்வமென காசினியில் நல்லோர்கள்
போற்றும் புருஷோத்தமனின் பொற்பாதம் பணிந்தோர்க்கு
வாட்டும் வறுமையெலாம் வந்தவழிச் சென்றுவிடும்
பொன்னும் பெரும்பொருளும் போகமும் நிறைந்திடுமே.

ஏழுமலை மீதிருந்து பூதலத்தை ஆளுகின்ற
வேங்கடவ னெங்கள்பிரான் பாதந்தனைப் பணிந்தால்
கோடிசுகம் தேடிவரும் நாடிவரும் நல்லறமும்
ஓடிவிடும் துன்பங்களும் உண்மையிது பொய்மையில்லை.

காவிரியாள் தாலாட்டும் அரங்கமா நகருறையும்
கற்பகத்தின் பொற்பதத்தைக் கண்டுதினத் தொழுதால்
பொன்னும் நவமணியும் எண்ணும் பொருள்யாவும்
மண்ணில் பெரும்புகழும் மாதவமும் ஓங்கிடுமே.

கவின்மிகு மலையாளக் கரையினிலே குருவாயூர்
அப்பனெனும் கண்ணபிரான் பாதந்தனைப் பணிந்தால்
மாண்புமிகு மனையறமும் மக்கட் செல்வமும்
புவனமதில் பெறற்கரிய பேறனைத்தும் பெற்றிடலாம்.

தென்றல்தவழ் திருவனந்தை திருநகரிலே யுறையும்
பத்மநாபனவன் திருப்பாதம் கண்டுதினந் தொழுதால்
பாய்ந்துவருந் துன்பமெலாம் பனித்துளிபோல் காய்ந்துவிடும்
குலந்தழைத்து நலஞ்சேரும் கோதகலும் வளஞ்சிறக்கும்.

தற்காகவும் கலியின் தோஷத்தினல் வேதத்தை இசையாதவர் அதற்கு அவப்பொருள்உரைப்பவர் ஆகியவர் களின் வஞ்சனைகளை அழிப்பதற்காக வும் ஸ்ரீ ரா ம ா நு ஜ மு னி வ ரை அர்ச்சை(பிம்ப)வடிவமாக இத்திவ்ய தேசத்தில் பிரதிஷ்டை செய்விக்க அநுமதி தந்தருள வேணுமென்றும் வேண்டிக்கொண்டார்.

இங்ஙனம் பிரார்த்திக்கப்பட்ட திருவேங்கடமுடையான் மிகவும் மகிழ்ச்சி கொண்டு, 'வாரீர் அனந் தாழ்வானே நீர் வேண்டிய இவ் வர மிரண்டும் எனக்கு மிக மிக இஷ்ட மானவை; என்னைப்பற்றி நம்மாழ் வார் திருமங்கையாழ்வார் முதலான திவ்யசூரிகள் அருளிய திவ்யப்பிர பந்தத் தொகுதிகள்போல என்னு டையவரான ராமானுஜமுனிவரைப் பற்றிய திவ்யப் பிரபந்தமாகிய இராமாநுச நூற்றந்தாதியும் அத் யயனுத்ஸவத்தில் தனியாகவே ஒரு நாளில் ப்ரபந்நர்களால் (என்னைத் தஞ்சமாகப் பற்றியவர்களால்) தம் விருப்பப்படி அனுஸந்திக்கப்படட் டும். ஸ்ரீராமாநுஜமுனிவரும் உமது கோரிக்கைக்குச் சேர எனது கோவி லிலேயே ஒருபகுதியில், ஆதிசேஷன் கருடன் ஸேனபதி ஆகியவர்கள் போலவே அர்ச்சைவடிவத்தில் விதிப்படி பிரதிஷ்டைசெய்விக்கப் படட்டும்' என்று விடையருளிச் செய்தான்.

பின்பு அனந்தாழ்வானும் இவ் வாறு பகவான் விசேஷகடாக்ஷம் செய்ததனல் மிக மகிழ்ந்த மன முடையவராய்த் தமது அபிமான விசேஷத்திற்குப்பொருந்துமாறு அத்யயனுத்ஸவத்தின் முடிவு நாளில் அநுஸந்திக்கத்தக்கதாக ஸ்ரீராமாநுஜ முனிவரால் நியமிக்கப் பட்ட கண்ணிநுண்சிறுத்தாம்பை அனுஸந்திக்கும் தினத்திற்கு மறு நாளில் இராமானுசநூற்றந்தாதி யைத் தனியாக அனுஸந்திக்கும்படி நியமித்து, அதன் பிறகு, முன்பு ராமாநுஜ முனிவர் நியமித்ததும் திருமலைநம்பியின் வரலாற்றை நினை வூட்டுமதுமான தண்ணீரமுதை எதிர்கொண்டுசெல்லும் உத்ஸவத் தைச் செய்யக்கடவதாக ஏற்பாடு செய்து, முன்பொருகால் இராமா னுசமுனிவர் இறுகத் தழுவித் தூய் மையாக்கித் தமக்குத் தந்ததும் அது முதலாகத் தமது திருமாளிகையில் தம்மால் ஆதரத்தோடு ஆராதிக்கப் பட்டு வருவதுமான அவர்தம்மு டைய திவ்யமங்களவிக்ரஹத்தையே ஸ்ரீவைகாநஸாகமத்தில் கூறிய படியே முறைப்படி ஸம்ஸ்கரித்து (மந்திரங்களினல் மேன்மைபெறச் செய்து) பெருமாள்திருக்கோவிலி லேயே இடப்பக்கத்தில் ஒரு மண்ட பத்தில் பிரதிஷ்டை செய்வித்து, 'ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய ஸ்ரீபாதாம் போருஹத்வயம்' (ஸ்ரீமத்ராமாநு ஜாசார்யருடைய திருவடித்தாமரை யிணை)என்று பகவான் தம்மைப் பற் றிக் கூறியருளிய தனியனுடைய மெய்ம்மையினல் தமக்கு ஸ்ரீராமா னுஜருடைய திருவடித்தாமரையாந் தன்மையும், 'ராமாநுஜபதச்சாயா கோவிந்தாஹ்வாऽநபாயிநீ' (கோவிந்தனென்னும் பெயர்பெற்று ராமாநுஜர்திருவடியை விட்டுப் பிரி யாத அத்திருவடி நிழல்) என்ற வச னத்தின் மெய்ம்மையினல் எம் பாருக்கு ராமானுஜருடைய திருவடி நிழலாந் தன்மையும், 'பாதுகே யதி ராஜஸ்ய கதயந்தி யதாஹ்வயா' (யாருடைய (முதலியாண்டானு டைய) பெயரினல் ராமானுஜரின் பாதுகையை வழங்குகின்ருர்களோ) என்ற வாக்கியத்தின் ஸத்தியத்தன் மையினல் முதலியாண்டானுக்கு ராமானுஜரின் பாதுகையாந் தன் மையும் தனித்தனியே நிலைபெற்றி ருக்கச் செய்தேயும், இந்தத் திவ்ய தேசத்தில் தமக்குள்ள பற்றின் மிகுதியினல் ராமாநுஜருடைய திரு வடித்தாமரை அதன்நிழல் ஆகிய இவ்விரண்டோடு கூடிய அவருடைய பாதுகைக்கு (அதாவது இம்மூன்றுக் குமே) அனந்தாழ்வானென்ற தமது திருநாமத்தையே சாத்தி, இவ்வாறு பலஸ்ரீவைஷ்ணவமத தருமங்களையும் மேன்மேலும் வளர்த்துக்கொண்டு, 'எல்லாத் தேசங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லாநிலைகளிலும் ராமாநுஜருடைய திருவாணையானது தடையற்ற ஆற்றலுடையதாய் வளர்ந்திடுக. நன்ருக வளர்ந்திடுக. ராமாநுஜருடைய திருவாணையானது நாடோறும் ஒளிமலிகியதாய்க் கொண்டு ஒவ்வொரு திசையின் கோடிவரையில் பரந்திடுக. அது உலக நன்மையை விரும்புமதல் லவா?' என்று ஒவ்வொருவேளை யிலும் பெருமாளருகில் ஸ்ரீராமா நுஜாசார்யருடைய திருவாணையின் வளர்ச்சியையே (இராமாநுசரால் ஆணையிடப்பட்ட தருமகாரியங் களின் வளர்ச்சியையே) பிரார்த் தனை செய்துவருமவராய், திருவேங் கடமுடையானுக்கு மங்களாசாஸ னம் செய்வதொன்றையே பெரும் பயனகக் கருதி அப்பெருமானுடைய குணங்களை அனுபவித்துக்கொண்டும் அவனுக்குத் தொண்டுகளைச் செய்து கொண்டும் இனிதே வாழ்ந்துவரலா னர். (தொடரும்)

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள் அவற் றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக் கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும்: இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங் களுக்கு முன்பாகவே அனுப்பினல், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# ருத்ராக்ஷத்தின் மகிமைகள்

லிங்க புராணத்தின் கூற்றுப்படி ருத்ராக்ஷமானது சிவ வழிபாட்டில் மிக மிக உயர்ந்த இடத்தை பெற்றுள்ளது. சிவபெருமானை பலரும், பலப்பல விதங்களில் வழிபடலாம். ஆனால் நெற்றியில் திருநீறும், கழுத்தில் ருத்ராக்ஷமும் அணியாமல் யார் சிவபூஜை செய்தாலும், அவருக்கு முழுமையான பலன் கிடைக்காது.

புராணங்களில் ருத்ராக்ஷத்தினை சிவபெருமானின் கண்களோடு ஒப்பிட்டுள்ளனர். திரிபுரன் என்ற அசுரனை சிவபெருமான் வதம் செய்தபோது, சிவனது கண்களிலிருந்து சிந்திய கண்ணீர்த் துளிகள், இந்த பூமியில் பட்டு ருத்ராக்ஷ மரங்களாக மாறின என்றொரு புராணக் கதை விளங்கி வருகிறது.

ருத்ராக்ஷத்தில் மொத்தம் பதினான்கு வகைகள் உள்ளன. ருத்ராக்ஷத்திலுள்ள முகங்களின் எண்ணிக்கைப்படி அவற்றின் பெயர்களும், மகிமைகளும், பயன்களும் வேறுபடுகின்றன.

ஒரேயொரு முகம் கொண்டது "சிவ ருத்ராக்ஷ". இதை அணிந்து கொள்வதால் பிராமணனைக் கொல்வதால் ஏற்படும் பிரம்மஹத்தி என்ற பெரும் பாபமும் நீங்கி, விமோசனம் பெறலாம்.

இரண்டு முகங்கள் கொண்ட ருத்ராக்ஷத்தை "ஹர் கௌரி" என்று அழைக்கின்றனர். இதை அணிந்து கொண்டால் பசுவினைக் கொன்ற கோவதம் என்ற பாவத்திலிருந்து விமோசனம் பெறலாம்.

"அக்னி ருத்ராக்ஷத்திற்கு" மூன்று முகங்கள். கடந்த மூன்று பிறவிகளில் ஒருவன் செய்த பாவங்கள் இதை அணிந்து கொள்வதால் நீங்கி விடும்.

நான்கு முகங்களுடையது "தாதா" (Dhata) என்ற ருத்ராக்ஷத்தினை அணிவதால் நாம் ஒரு மனிதனைக் கொல்வதால் ஏற்படும் பாவம் தீரும்.

"காலாக்னியில்" ஐந்து முகங்கள். பெரும்பாலானவர்கள் அணிகின்ற ருத்ராக்ஷ மாலைகள் இந்த வகையைச் சேர்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வகை ருத்ராக்ஷத்தை அணிவதால் நாம் சாப்பிடக்கூடாதவற்றை சாப்பிடுவதாலும், செய்யக்கூடாதவற்றைச் செய்வதாலும் ஏற்படும் பாவம் நீங்கும்.

ஆறு முகங்களுள்ள ருத்ராக்ஷத்திற்கு ஆறுமுகத்தின் பெயரான "சுப்ரமண்யம்" என்று பெயர். இது மனித உயிரின் கருவைக் கலைப்பதால் உண்டாகும் பாவத்தை போக்கும்.

"ஆனந்த" ருத்ராக்ஷத்திற்கு ஏழு முகங்கள். ஒருவன் தங்கத்தைத் திருடிய பாவத்திலிருந்து இதை அணிந்து கொள்வதால் தப்பிக்கிறான்.

எட்டு முகங்களுடைய ருத்ராக்ஷத்திற்கு "விநாயக்" என்று பெயர். இது பொய் சொல்வதால் உண்டாகும் பாவத்தைப் போக்க வல்லது.

"பைரவா" ஒன்பது முகங்களுடைய ருத்ராக்ஷம். இது சிவஸாயுஜ்யத்தை அளிக்கக் கூடியது. பத்து முகங்களுடைய ருத்ராக்ஷத்தின் பெயர் "மஹாவிஷ்ணு" இதை அணிந்து கொள்பவர்கள் தீய சக்திகளிலிருந்து காப்பாற்றப்படுவர்.

பதினொரு முகங்களுடையது "ருத்ர". பன்னிரண்டு முகங்களுடையது "அர்கா". இவை முறையே யாகம் செய்வதால் ஏற்படும் நன்மைகளையும், பலவித புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய புண்ணியத்தையும் தர வல்லது.

பதிமூன்று முகங்களுடையது "காமா". இது வேண்டுவன எல்லாம் தரக் கூடியது. பதினான்கு முகங்களுடைய "ஸ்ரீ காந்தா" ருத்ராக்ஷமானது அணிபவர்களின் குடும்பத்தைப் பல விதங்களில் மேலடையச் செய்யும்.

ருத்ராக்ஷங்களை தலை, கை, கழுத்து மற்றும் காதுகளைச் சுற்றியும் அணிந்து கொள்ளலாம். சாதாரணமாக ஒன்பது முகங்களுடைய ருத்ராக்ஷத்தை வலது கையிலும், பத்து "பைரவ" ருத்ராக்ஷத்தை தலையிலும் அணியலாம்.

கழுத்தில் அணிந்து கொள்ளும் ருத்ராக்ஷ மாலைகளில் 25, 27 அல்லது 108 கொட்டைகள் இருக்க வேண்டும்.

## திருமலையான்

"ஸ்கந்த புராணத்தில்" ஒருவன் ருத்ராக்ஷ மாலையை அணிந்திருந்தால், அவன் வேறு எந்த விதிமுறைகளை கடைபிடிக்காவிட்டாலும் பரவாயில்லை என்று கூறப்பட்டுள்ளது. ருத்ராக்ஷ மாலை அணிந்திருந்தால் சிவனின் திருவடியை அடையலாம். "பத்ம புராணத்தில்" கூறியுள்ளபடி 27 ருத்ராக்ஷங்களுடைய மாலையை அணிந்து கொண்டால் நினைத்த காரியத்தை வெற்றிகரமாகச் செய்து முடிக்கக் கூடிய மனோபலத்தினைத் தரவல்லது.

ஆயுர்வேத மருத்துவர்களுக்கு ருத்ராக்ஷம் ஒரு மிகச் சிறந்த மருந்தாக விளங்குகிறது. ஆம் அவர்களது கருத்துப்படி ருத்ராக்ஷ மாலையை அணிவதால் பலவித நோய்களைத் தடுக்கும் சக்தியை அளிக்கிறது. இருதயம் சம்பந்தப்பட்ட நோய்கள், இரத்த அழுத்தம், அம்மை நோய் (small pox) முதலிய பல நோய் கண்டவர்களுக்கு ருத்ராக்ஷ மாலை அணிவது மிகுந்த பயன் தரும். இது ஒரு தலை சிறந்த நோய் வராமல் காக்கும் மருந்தாகும். (Prophylactic)

இவ்வாறு மனிதனின் மனதைப் பலப்படுத்தும் ஆன்மீகத்திலும், உடலைப் பலப்படுத்தும் மருத்துவத்திலும் பலவித சிறப்புகளுடைய ருத்ராக்ஷத்தைப் பற்றிப் பல அரிய தகவல்களை அறிய அறிய நம் மனம் மேன்மேலும் பரவசமடைவதில் வியப்பேதும் இல்லைதான். ★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்**
**அத்தியாயம்—16.**
**பகுதி—9.**

அசுர இயல்புடையவர்களும் யாகம் செய்வதுண்டு. அதைப் பற்றிப் பகவான் கீழ்க்காணும் சுலோகத்தில் கூறுகிறார்.

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா
தனமானமதான்விதா: |
யஜந்தே நாமயக்ஞைஸ்தே
தம்பேனாவிதி பூர்வகம் ॥ (16-17)

"தற்புகழ்ச்சியுடையார், வணங்காதவர்கள், செல்வச் செருக்கும், மதமும் உடையவர்கள் பெயரளவில் விதி வழுவி யாகத்தை ஆடம்பரத்துக்காகச் செய்கின்றனர்."

போற்றுதற்குரிய பல நல்ல செயல்களைச் செய்து விட்டுச் செய்தது யாரென்றே வெளியில் தெரியாத அளவுக்கு அடக்கமாக மறைந்திருக்கும் தன்மை ஒரு சில சான்றோர்களுக்கு மட்டுமே உண்டு. மாறாக மிகச் சிறிய காரியம் செய்தாலும் அதனால் தனக்கு மிக அதிகமான பெயரும் புகழும் வரவேண்டும் என்று விரும்புபவர்களை நமது சமுதாயத்தில் பெரும்பாலும் காணலாம். நமது நாட்டின் புராதனச் செல்வங்களான பிரம்மாண்டமான திருக்கோவில்களைப் பற்றிக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்! மதுரை ஸ்ரீ மீனாக்ஷியம்மன், தஞ்சை பிரஹதீஸ்வரர், ஸ்ரீ ரங்கம் ரங்கநாதர் மற்றும் சிதம்பரம் நடராஜர் ஆலயங்கள் தான் எவ்வளவு பிரம்மாண்டமானவை! இவற்றைப் போன்ற ஆலயங்களை நாம் இன்று கட்டத்தான் முடியுமா? அவற்றைக் கட்டிய நமது முன்னோர்கள் எந்த விதப் புகழையும் பெயரையும் விரும்பாது அவற்றை நிர்மாணித்துச் சென்றிருக்கின்றனர்.

ஆனால் இந்தக் காலத்தில் நாம் சமயத்தின் பெயரால் ஆங்காங்குப் பல தில்லுமுல்லுகள் நடப்பதைக் காண்கிறோம். தமிழ் நாட்டில் இன்று மதுரை, திருச்சி, சென்னை போன்ற பெருநகர்களின் தெருக்களில் பிளாட்பாரங்களில் காளான்களைப் போன்று பல சிறு கோவில்கள் முளைப்பதைக் காண்கிறோம். மார்ச், ஏப்ரல் மாதங்களில் இந்தக் கோவில்களில் நிகழும் வருடாந்திர விழாக்களுக்காகச் செலவிடப்படும் பணமும் மற்ற ஆர்ப்பாட்டங்களும் நம்மைப் பிரமிக்க வைக்கின்றன. ஜன சந்தடி மிக்க நாற்சந்தியில் தெருவின் மத்தியில் 'அம்மன் பிரத்யக்ஷமாயிருக்கிறாள்' என்று ஏதோ சொல்லி தற்காலிகக் கோவிலை நிறுவி லட்சக் கணக்கில் பணம் வசூல் செய்து 'தாம் தூம்' என்று பணத்தை வாரியிறைப்பதைப் பார்க்கும் பொழுது "இதுவா பக்தி? இதுவா சமயம்? இதுவா வழிபாடு?" என்ற கேள்விகள் ஒருவர் மனத்தில் எழத்தான் செய்கின்றன. உண்மையான சமயத்திற்கும் இத்தகைய ஆடம்பர விழா மற்றும் வழிபாடுகளுக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. கோவில்கள் மிகமிக இன்றியமையாதவை எனினும், தெருக்கள் தோறும், சந்துகள் தோறும் இத்தகைய பிளாட்பாரச் கோவில்கள் தேவையா? என்பது பற்றி ஆஸ்திகப் பெருமக்கள் சிந்திக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இக்காலத்தில் சிலர் கோவில்கள் கட்டுவிப்பதும், விழாக்கள் கொண்டாடுவதும் ஆராதனை, அபிஷேகங்கள் செய்வதும் தற்புகழ்ச்சிக்காகவும், வெறும் விளம்பரத்துக்காகவும் மட்டுமே அமைகின்றன. இறைவனின் பெருமைக்கென்றே ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற மகான்கள் செய்த வழிபாடு எங்கே? தங்களது சொந்தப் பெருமைக்கென்றே ஆடம்பரச் செயல்களில் ஈடுபடும் இத்தகையவர்களது செயல்கள் எங்கே? உண்மையான பக்திக்கும், போலிப் பக்திக்கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு.

அஹங்காரம் பலம் தர்பபம்
காமம் க்ரோதம் ச ஸம்ச்ரிதா: |
மாமாத்மபரதேஹேஷு
ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா: ॥
(16-18)

திரு. டி. கே. நாராயணன், M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

"அஹங்காரம், பலம், இறுமாப்பு காமம், குரோதம் இவைகளை உடையவர்கள் தங்கள் தேகத்திலும், பிறர் தேகத்திலும் உள்ள என்னை வெறுத்து அவமதிக்கின்றனர்."

நமது புராண இதிகாசங்களில் வரும் பல அரக்கர்களது சரித்திரத்தை நாம் சற்று ஊன்றிக் கவனித்தால் மேற்காணும் சுலோகத்தில் உள்ள ஐந்து தீய குணங்களாலேயே அவர்கள் தங்கள் அழிவைத் தேடிக் கொண்டதைக் காணலாம். அஹங்காரம் குறையக் குறைய ஒருவனிடம் தெய்வ இயல்பு கூடும். அஹங்காரம் அதிகமாகும் அளவு ஒருவனிடம் அசுர இயல்பு அதிகரிக்கும்; அஹங்காரம் உச்சத்தில் இருந்தால் ஒருவன் கொடூர அரக்கனாகிறான். இராவணன், கம்ஸன், ஹிரண்யன் போன்ற அரக்கர்களின் சரித்திரம்

நமக்குப் புகட்டும் பாடம் இதுவே யாகும்.

அசுரர்களும் தங்களது ஆசைகள் நிறைவேறுதற் பொருட்டு தங்கள் உடலை வருத்திக் கடும் தவம் செய்வர். ஆனால் அத்தகைய தவத்தின் முடிவில் இறைவனிடம் அவர்கள் வேண்டிய வரங்களோ, பிற உயிர்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பதிலேயே அமைந்திருந்தன! 'எவர் தலையில் நான் கையை வைத்தாலும் அவர்கள் உடனே அழிந்துவிட வேண்டும்!' என்று இறைவனிடம் வரம் பெற்ற ஒரு அசுரன் அதைச் சோதிக்க வேண்டி இறைவன் தலையிலேயே கையை வைக்க முயன்று இறுதியில் தன் தலையில் கையை வைத்துத் தானே அழிந்தான் என்ற கதை நமக்குத் தெரிந்தது தானே!

தங்களுக்கு வாய்த்த பலத்தையெல்லாம் பிறருக்குத் துன்பம் விளைவிப்பதிலேயே உபயோகிக்கும் சிலரை நாம் நம்மிடையே காணலாம். அத்தகையவர்கள் அசுர இயல்புடையவர்கள்.

இறைவன் அனைவரிடத்தும் இலங்குகிறார். அனைத்திடத்தும் உள்ள இறைமையைக் காண்பதுவே உயர் அறிவாகும்; இது தெய்வ இயல்பு படைத்தவர்கள்பால் காணப்படும் நல்லியல்பாகும். மாறாக அசுர இயல்புடையவர்கள் கடும் தவத்தால் தங்கள் உடலையும் பெரிதும் வருத்திக் கொள்கிறார்கள். அதுபோல தங்களது கொடிய பல செயல்களால் பிறருக்கும் தீங்கு விளைவிக்கிறார்கள். இதனால் தங்களிடமும் பிறரிடமும் உள்ள இறைவனைப் புறக்கணிப்பதாகிய பாபச் செயலை அவர்கள் செய்த குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

இதனால் உண்டாகும் அசுரர்களின் வீழ்ச்சியைப் பற்றி அடுத்த மூன்று சுலோகங்கள் தெரிவிக்கின்றன.

தானஹம் த்விஷத: க்ரூரான்
ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிபாம்யஜஸ்ரமசுபான்
ஆஸுரீஷ்வேவ யோனிஷு ||(16-19)

'த்வேஷம் உடையவர்களை, கொடியவர்களை, கடையவர்களை, இழிந்தோரை, பிறந்து இறந்து உழலும் உலகில் அசுரப் பிறவியிலேயே திரும்பத் திரும்ப நான் அவர்களைத் தள்ளுகிறேன்'

அசுர குணம் படைத்தவர்கள் இறைவனை மதிப்பதில்லை, இறைவனை வணங்கும் பக்தர்களையும் அவர்கள் பழிக்கிறார்கள். ஸ்ரீராமர், கிருஷ்ணர் போன்ற அவதாரங்களை அவர்கள் சாதாரண மானிடர்களாகக் கருதி அவர்களது தெய்வீகச் செயல்களிலும் களங்கம் கற்பிக்க முயல்கின்றனர். இதிகாஸ, புராணங்களில் வரும் நிகழ்ச்சிகளை அவர்கள் தங்கள் மனம் போனபடி இழித்துரைப்பர். பிராணிகள், பறவைகள் மட்டுமல்லாது மனிதர்களையும் வதைத்துக் கொல்லுதலில் இத்தகைய அசுர குணம் படைத்தவர்கள் இன்பம் காண்பர். இவர்களைப் பகவான் எப்படித் தண்டிக்கிறார் என்பதை இந்தச் சுலோகத்தில் அவரே விளக்குகிறார்.

எத்தனையோ பிறவிகளை எடுத்து எடுத்து இளைத்துப் பெற்ற பிறவி இவ்வரிய மானிடப் பிறவி. இலட்சக் கணக்கான பிறவிகளில் தலையாயது மனிதப் பிறவி. புல்லாகிப் பூடாகி, பறவையாய், பாம்பாய், கணங்களாய், பல் விருகமாகிப் பின்னர் இறுதியில் பெற்ற பிறவி இம் மானிடப் பிறவி. இப்பிறவியை நன் முறையில் பயன்படுத்தி நாம் இதனினும் மேலான இனிப்பிறவாப் பெருநிலையையும் அடையலாம். மாறாக இப்பிறவியில் இழிந்தன பல செய்து விலங்குகளைவிடக் கீழான நிலையில் வாழ்ந்தால் அடுத்த பிறவி நிச்சயம் மனிதப் பிறவியாக இருக்காது, பாம்பு, பல்லி போன்ற கீழான பிறவிகளாக அமையும் என்பதைப் பகவான் இந்தச் சுலோகத்தில் தெளிவாக விளக்குகிறார்.

செய்த செயல்களுக்கான பலனைக் கண்டிப்பாய் அனுபவித்தே ஆக வேண்டும் என்பதுதான் இயற்கையின் நியதி. வானத்தைப் பார்த்து ஒருவன் துப்பினால் அந்த எச்சில் திரும்பவும இவன் முகத்திலேயே வந்து விழுவது போல் பிறர் எவரையோ தாக்குகிறோம், யாருக்கோ தீங்கு செய்கிறோம் என எண்ணித் தீவினை செய்பவர்களை அவர்களது தீவினை மீண்டும் அவர்களையே பன்மடங்கு பலத்துடன் வந்து தாக்குகிறது.

இப்பிறவியில் நாம் செய்யும் செயல்கள் நமது எதிர்காலப் பிறவியை நிர்ணயிக்கிறது. நல்லவர்களைத் துன்புறுத்தி இன்பம் கண்டவர்கள், அஹங்காரம், பலம், காமம், குரோதம் போன்றவற்றால் அரக்க குணம் மேலிட்டு அடாது செய்தவர்களைப் பகவான் தண்டனையாக மனிதப் பிறவியிலிருந்தே பல படிகள் கீழே தள்ளிவிடுகிறார். 'திரும்பவும் வெகு காலத்திற்கு அசுர யோனிகளிலேயே நான் இத்தகையவர்களைத் தள்ளி விடுகிறேன்' என்று பகவான் கூறுகிறார். அசுரயோனி அதாவது அசுர குணம் மேலிட்ட, பிற உயிர்களைத் துன்புறுத்தும் சுபாவம் மேலிட்ட புலி, சிங்கம், பாமபு போன்ற கொடூர விலங்குகளாகப் பிறக்கச் செய்கிறேன் என்ற பகவான் கூற்றால் இப்பொழுது நமக்கு மனிதப் பிறவி அமைந்திருப்பினும் இனி வரவிருக்கும் பிறவி மனிதப் பிறவியாகத் தான் இருக்கும் என்பதற்கு எந்த விதமான உத்திரவாதமும் இல்லை என்பது தெளிவாகிறது. தீயது செய்தால் மிக இழிந்த பிறவிதான் கிட்டும் என இதனால் வலியுறுத்தப் படுகிறது.

(தொடரும்)

*மதிப்புரை*

# ★ தேவி மானஸ பூஜை ★

(ஆசிரியர்: நஜன், வெளியீடு: பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600004, பக்கங்கள்: 160, விலை. ரூ. 12-00).

அவரவர்களின் இஷ்ட தெய்வத்தைப் பூஜிப்பதற்காக ஒன்பது விதமான 'பக்தி' முறைகளை நம் முன்னோர்கள் நமக்கு வகுத்துத் தந்துள்ளார்கள். ஒவ்வொரு வழிபாட்டிற்கும் தனித்தனியான குணங்கள் உண்டு. இப்படித்தான் செய்ய வேண்டும் என்ற நெறிமுறைகளும் உண்டு. ஆனால் எந்த விதமான வழிமுறைகளும், வரையறைகளும் இல்லாத ஒரே முறைதான் 'மானஸீக பூஜை' என்பது.

இந்த 'தேவி மானஸ பூஜை' நூலில் ஆசிரியர், அண்மையில் அமரரான ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரா நஜன் அவர்கள், அம்பாள் உபாசனையைப் பற்றி அழகுற விளக்கியுள்ளார்.

மானஸீக பூஜையே ஒரு தவம் என்று கூறும் ஆசிரியர், அம்பிகை என்பவள் யார் என்பதை ஆதிசங்கரர் மூலமாக விளக்கி மானஸீக வழிபாட்டை தியானம், பூஜை, ஹோமம் என்று மூன்று வகைகளாகப் பிரித்து, ஒவ்வொன்றைப் பற்றியும் விரிவாக எழுதியிருக்கிறார்.

மனத்தை அடக்குவதே தியானம், மானஸீக பூஜையே யாகம்; தனிமையில் அமர்ந்து தியானிப்பதே ஹோமம். இவையே பூஜை முறை. இந்த மானஸீக பூஜைக்கு எந்தவிதமான பூஜைப் பொருட்களோ, ஆடம்பரமான செலவுகளோ தேவையில்லை. நமது பேச்சுக்களே ஸ்தோத்திரங்கள், நடப்பதே பிரதக்ஷிணங்கள், புசிப்பதே ஹோமம், படுப்பதே நமஸ்காரங்கள்' என்பது ஆதிசங்கரரின் மானசீக வழிபாடு.

நமக்கு எந்த பாவனையில் பிடிக்கிறதோ அந்த பாவனையில் அம்பிகையை உபதேசிக்க 'பாவனைகம்யா தேவி பாவனா பூஜை விளக்கம்' தெளிவாகவும்; ஸ்ரீவித்யா நவாவரண பூஜைகளை விரிவாகவும்; அம்பிகைக்கு மானஸீகமாகச் செய்யும் அறுபத்து நான்கு உபசாரங்களை எளிதாகவும் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

வேதம், ஆகமம், உபதேசம், அப்பியாசம் என்ற நான்கிற்கும் ஆம்னாயம் என்று பெயர். ஆறு வகையான ஆம்யை வியஷ்டி பூஜா முறைகளையும், ஸ்ரீ வித்யா ஸந்த்யா விதிகளையும், தேவி மானஸ அஷ்டாங்கத்தையும் ஆசிரியர் எளிமைப்படுத்தியுள்ளார். ஆனால் ஆம்னாயங்களையும், ஸ்ரீவித்யா ஸந்த்யா விதிகளையும் குருமுகமாகத் தெரிந்துகொண்டு உபதேசம் பெற்ற பின்னரே கடைப்பிடிக்க வேண்டும். மானஸீக பூஜையில் இவையெல்லாம் இருந்தாலும் மனத்தினை ஒரு நிலைப்படுத்தி தத்தமது இஷ்ட தெய்வத்தைத் தியானிப்பதே தலை சிறந்த மானஸீக பூஜையாகும்.

தேவி மானஸீக பூஜையைத் தவிர கணேசர், சூரியன், மஹாவிஷ்ணு, சிவன், சுப்ரமண்யர் போன்ற தெய்வங்களின் மானஸீக பூஜைகளையும் ஆசிரியர் எடுத்துக் கூறி, முக்கியமான ஸ்தோத்திரங்களையும் தொகுத்தளித்திருக்கிறார்.

தேவி உபாசகர்களுக்குத்தான் என்றில்லாமல், ஆஸ்திக மஹா ஜனங்கள் அனைவருக்கும் பயன்படும் விதத்தில் இந்த 'தேவி மானஸ பூஜை' எழுதப்பட்டுள்ளது. நூலாசிரியர் நஜன் இன்று நம்மிடையே இல்லையே தவிர, அவர் விட்டுச் சென்றுள்ள நூல்களெல்லாம் ஆன்மீக அன்பர்களுக்கு அரிய பொக்கிஷங்களாகும்.

அம்மன் சத்திய நாதன்,
சென்னை.

---

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப்படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

---

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப் பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 220 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொரு அறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 300 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.
2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப் பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.
3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.
4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.



# பிள்ளையார்





'' பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் — கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்கு
சங்கத் தமிழ் மூன்றும் தா ''

பிள்ளையார் எங்கும் நிறைந்தவர். எதிலும் நிறைந்தவர். வடிவமில்லாத ஒரு சாணத்தை எடுத்துப் பிடித்து நீதான் பிள்ளையார் என்று சொன்னாலும் அது பிள்ளையாராகச் சிறப்பு அடைந்து விடும். அதனால் தான் மஞ்சளிலும், களிமண்ணிலும், சாணத்திலும் ஒரு உருண்டை பிடித்து வைக்கிறோம். வெறும் எழுத்தில் கூட அந்தப் பிள்ளையார் இருக்கிறார் என்று காட்டவே 'ஓம்' என்ற மந்திரத்தைச் சுருக்கமாக 'உ' என்று எழுதுகிறோம் . ...பிள்ளையாருக்கு ஒரு மனைவி மட்டுமல்ல இரண்டு மனைவியர்......

பிரம்ம தேவனின் செருக்கை ஒரு சமயம் பிள்ளையார் அடக்கி அவருக்கு மன்னிப்பு அளித்தார்.

பிள்ளையாரின் பெருமையினை உணர்ந்த பிரம்ம தேவன்—தனது இரண்டு குமாரத்திகளான ஸித்தி-புத்தி என்பவர்களை பிள்ளையாருக்குத் திருமணம் முடித்து வைத்தார்..

மத்தளம் கொட்ட, வரி சங்கம் நின்றூத தேவர்கள் படை சூழ பிள்ளையாரின் கல்யாணம் நடந்தது!

தனது பிள்ளையின் திருமணத்தினால் தன் பிள்ளைத் தன்னைப் பிரிந்து விடுவானோ என்று அஞ்சிய பார்வதி தேவியார் 'மகனே என்னை விட்டுப் போய் விடுவாயோ?' என்று கண்ணீர் விட்டு அழுதார்.

உடனே பிள்ளையார்,

''அம்மா நான் மற்றொரு பிள்ளையாராக, பிள்ளை வடிவில் எப்பொழுதும் உன்னுடனேயே இருப்பேன். கவலைப்படாதே'' — என்றார்.

அந்த பாலகணபதிக்குத்தான் எத்தனை சோதனைகள்! அம்மம்மா!

கணபதி!

இந்தப் பெயர் எப்படி வந்தது?

கனம் என்றால் பூத கணங்கள் அதாவது சிவபெருமானின் படை வீரர்கள். பதி என்றால் தலைவன்.

கணங்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கியதால் கணபதி, கணநாதர், கணேசன் என்று அழைக்கப்படுகிறார் நம் பிள்ளையார்.

ஒரு சமயம் தேவர்கள் வழிபட்ட விக்கிரகத்தை அகற்றி விட்டு அங்கு தானே அமர்கின்றார் பிள்ளையார். அவர்களுக்குத் தனது விசுவரூபத்தினைக் காட்டியருளினார்.

அதில் விஷ்ணு, சிவன், பிரம்மா, சகல தேவர்களும் அடங்கியிருந்தனர்.

சிவபெருமானின் சடைமுடியில் விளங்கிய பிறை நிலாவை விளையாட்டாக எடுத்துத் தன் தலையில் பொருத்திக்கொண்டு அழகு பார்த்தார் பிள்ளையார். இதைக்கண்டு கோபம்கொண்ட சிவன் தனது

---

அவினாசி முருகேசன்

---

கணங்களை அனுப்பிப் பிள்ளையாரைத் தண்டிக்கச் சொல்லுகிறார். பிள்ளையாரிடம் போருக்குச் சென்ற நந்தி முதலிய பூதகணங்கள் தோற்றுப் போகின்றனர்...அன்று முதல் சிவபெருமானைவிட, பிள்ளையாரே தன் தலைவர் என்று பூதகணங்கள் முடிவு செய்கின்றனர்...கணநாதன் என்ற பெயர் இப்படித்தான் வந்தது.

பிறை சூடிய கடவுளர் இருவர். ஒருவர் சிவபெருமான், மற்றொருவர் பிள்ளையார். அதனால்தான் பிள்ளையாருக்கு 'பாலசந்திரன்' என்ற மற்றொரு பெயரும் வழங்கப்படுகிறது.

பிள்ளையாருக்கு மட்டும் சிதறு தேங்காய் உடைக்கிறோமே, எதற்குத் தெரியுமா?

பிள்ளையாருக்கு உபநயனம் நடக்கும்போது, பிள்ளையார் மேடையேறு

கிற சமயத்தில் அரக்கன் ஒருவன் படியில் மறைந்து இருந்தான். அதைக்கண்ட கணநாதன், மேடையில் இருந்த தேங்காய் ஒன்றை எடுத்து அரக்கன் மீது போட, அவன் அப்பொழுதே மாண்டு விட்டான்......

முருகனுக்கு மட்டும் மயில் வாகனம் சொந்தமில்லை. மயில் அவருடைய அண்ணனான பிள்ளையாருக்கும் சொந்தம். 'மயூரேசன்' என்ற ஒரு பெயர் கூட பிள்ளையாருக்கு உண்டு.

பால கணபதியாகிய பிள்ளையார் சின்ன வயதிலேயே கொடிய அரக்கர்களை ஒழிக்கப் போர்க்கோலம் பூண வேண்டியதாகி விட்டது.

கஜமுகாசுரன் என்ற கொடிய அரக்கன் தேவர்களைத் துன்புறுத்தியதால், கணநாதன் தானே போர்க்கோலம் பூண்டு ஆயுதத்தாங்கிப் புறப்படுகிறார்...

போர்க்களத்தில் தேவகணங்களும், அசுரகணங்களும் மோதுகின்றன...

பிள்ளையார் தொடுத்த வேல், ஈட்டி, அம்பு போன்ற எந்த ஆயுதமும் கஜமுகாசுரனை ஏதும் செய்யவில்லை...

உடனே பிள்ளையார் தன் முகத்தில் பதிந்திருந்த தந்தங்களில் ஒன்றைப் பிடுங்கி அரக்கன் மீது எறிகின்றார்...

வலிமை வாய்ந்த அந்தத் தந்தம்...அக்கொடிய அரக்கனை வீழ்த்தி அவனது வலிமையைப் போக்கி விடுகிறது...

உயிர் பிழைத்தால் போதும் என்ற நினைவுடன், உடனே அந்த அரக்கன் மூஷிகமாக தன் வடிவத்தை மாற்றிக்கொண்டு தப்பி ஓடுகிறான்.

ஆனால் பிள்ளையாரின் பார்வையிலிருந்து அவன் தப்ப முடியவில்லை.. அந்த மூஷிகனைப் பிடித்துக் கொல்ல நினைக்கும்போது, அந்த அரக்கன் 'சரணம் கணேசா' என்று மன்னிப்புக் கேட்கின்றான்.

கணநாதரும் மூஷிக வடிவில் இருந்த அரக்கனை மன்னித்து எப்பொழுதும் தன் அருகிலேயே வைத்துக் கொள்கின்றார். 'மூஷிக வாகனர்' ஆனார் பிள்ளையார்.

வாதாபி கணபதி என்று பாடுகிறோமே என்ன காரணம்? அதற்கும் ஒரு கதை உண்டு.

பல்லவ அரசனான நரசிம்மவர்மனின் படைத் தளபதியான பரஞ்சோதி என்பவர் வாதாபி நகர் மீது படையெடுத்துச் சென்றார். வாதாபி நகரத்தைத் தீக்கிரையாக்கி வென்றான். அப்போது பரஞ்சோதியின் பார்வையில் கோட்டையில் இருந்த ஒரு அழகான கல் சிலை கவர்ந்தது. அதைக் கண்டு மகிழ்ந்த தளபதி, அச்சிலையை அப்படியே பெயர்த்து எடுத்து, தமிழ் நாட்டுக்குக் கொணர்ந்தார்..

அந்தச் சிலைதான் கணநாதர்...

வாதாபியிலிருந்து வந்த கணபதி தமிழ்நாட்டில் குடியேறிய கதை இதுதான்.

சதுர்த்தி என்றால் என்ன?

விநாயகருக்கு உகந்த நாள் அது.

அதற்கும் ஒரு கதை உண்டு.

ஒருநாள் கைலாயத்தில் தேவர்கள் எல்லாம் கண்டுகளிக்க பிள்ளையார் நடனம் செய்கின்றார்.. தொந்தி வயிறு, குறுகிய கால்கள், தொங்கிய தும்பிக்கை...இவற்றைக் கண்டால் சிரிப்பு வராமல் இருக்குமா?

அங்கிருந்த சந்திரனுக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. இதைக் கண்ட விநாயகருக்குக் கோபம் வந்து, சந்திரன் உருவை யாரும் பார்க்கக் கூடாது என்று சபித்து விட்டார்.

பிழையை உணர்ந்த சந்திரன் மன்னிப்புக் கேட்கிறான்.

உடனே பிள்ளையார்,

'சுக்கில சதுர்த்தியில் உன்னைக் காண்பவர்கள் வீண் அபவாதம் அடைவார்கள். ஆனால் ஆவணி மாதம் சுக்கில சதுர்த்தியில் என்னை பூஜித்தால் அந்த அபவாதம் நீங்கும்' என்று சாப விமோசனம் தருகிறார்.

இந்த சதுர்த்தி நாளையே நாம் விநாயக சதுர்த்தியாகக் கொண்டாடுகிறோம்.

விநாயகன் வினைகளைக் களைபவன்.

அவனது திருவடிகள் எல்லாத் துன்பத்தையும் நீக்கும்...

வேழமுகத்து விநாயகனைத் தொழுதால்

வெற்றிகள் குவியும்.........

கலை நிறை கணபதி சரணம் சரணம்.

கஜமுக குணபதி சரணம் சரணம் சரணம்.

---

## ஐங்கரங்கள்

அவர் தமது கைகளில் ஒன்றில, தம் பொருட்டு மோதகம் வைத்திருக்கின்றார்; மற்றொரு கையில் தேவர்களைக் காப்பதற்காகத் தந்தம் ஏந்தியிருக்கின்றார்; பிறிதொரு கையில் தம்முடைய தாய் தந்தையர் ஆகிய பார்வதி பரமேசுவரர்களை அபிஷேகம் செய்து வழிபடுதற்பொருட்டு 'நீர் கலசம்' தாங்கியிருக்கின்றார். ஏனைய இரண்டு கைகளிலும், உயிர்களாகிய நம்மை ஆணவ மலம் ஆகிய யானையானது பற்றி நலிவுறுத்தாதிருக்குமாறு செய்தற்பொருட்டு பாசமும் அங்குசமும் வைத்துக் கொண்டிருக்கின்றார்!



---

# திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்

மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அலப்ய லாபமாகப் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளில் சிறந்தவையென்று சொல்லப்படுகின்ற கோயில் திருமலை பெருமாள் கோயில் என்னும் மூன்றினுள்ளே நடுநாயகமாக விளங்குவது திருவேங்கடமலையாகும். இத்தலத்தை விஷ்ணு க்ஷேத்திரமென்றும், இதன் கண் திகழும் திருவேங்கடமுடையானைத் திருமாலென்றும் வேதம் இதிஹாஸம் புராணம் ஸ்ரீ பாஞ்சராத்ர ஸ்ரீவைகாநஸாகமங்கள் ஆழ்வார்கள் அருளிய திவ்ய ப்ரபந்தங்கள் முதலிய ப்ரமாண க்ரந்தங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன என்பது அனைவரும் அறிந்த விஷயம். இத்திருப்பதியில் எம்பெருமானுக்கு ஸ்ரீவைகாநஸாகம முறைப்படி நித்ய திருவாராதன மஹோத்ஸவாதிகளெல்லாம் தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றன திருவேங்கடமுடையானைப்பற்றி இதிஹாஸ புராணங்களிலுள்ள ஏறக்குறையப் பன்னீராயிரம் ச்லோகங்களடங்கிய ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யப் பகுதியும் நான்கு வேதங்கள் போலே பண்டிதர்களால் இக்கோவிலில் தினந்தோறும் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றது. இவையனைத்தும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறிமுறைகளேயாயினும் ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தானுஸந்தானமும் எம்பெருமானார் முதலான பூர்வாசார்யர்களின் ஸம்பந்தமும் இல்லையாகில், திருமலையில் நடைபெறும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறிமுறைக்குப் பூர்த்தியில்லையாகையால், அருளிச் செயல்களின் அனுஸந்தானத்தைப் பற்றியும், பூர்வாசார்யர்களின் ஸம்பந்தத்தைப் பற்றியும் சிறிது விண்ணப்பிக்கப்படுகிறது. ஆறுயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம் ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலை திருமலையொழுகு முதலிய நூல்களிலுள்ள விஷயங்களேயன்றி வேறு விஷயங்கள் இதில் இடம் பெறவில்லை. ப்ராமாணிகர்கள் குற்றம் நீக்கிக் குணமுண்டேல் கொள்ள வேண்டுகிறேன்.

எம்பெருமானார் முதன்முதலாகத் திருமலைக்கு எழுந்தருளும்போது திருமலையடிவாரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஆழ்வார்களைத் திருவடிதொழுதாரென்று ஆறுயிரப்படி குருப்ரம்பரா ப்ரபாவத்தில் காண்கிற படியாலும், திருமலைக்கெழுந்தருளின ஆழ்வார்திருவரங்கப் பெருமாளரையரைத் திருமலை நம்பியும், அனந்தாழ்வானும், 'நாளை முதல் இங்கு நடைபெறும் அத்யயனோத்ஸவத்தில் தேவரீர் நாலாயிரத்தையும் தேவகானத்திலேறிட்டு அனுஸந்திக்கவேணும்' என்று ப்ரார்த்தித்ததாகத் திருமலையொழுகில் உள்ளதனாலும், திருமலையில் எம்பெருமானார் காலத்துக்கு முன்பே அருளிச் செயலின் அநுஸந்தானமும் ஆழ்வார்களின் கோயில்களும் உண்டென்பது அறியக் கிடக்கின்றது. அருளிச் செயல் அநுஸந்திக்கும் முறையில் சில திருத்தங்கள் எம்பெருமானாரால் ஏற்படுத்தப்பட்டன என்பது பின்னர் விண்ணப்பிக்கப்படும்.

### திருவேங்கடமுடையான் அருளிச்செயல் கேட்டருளும் ப்ரகாரம்

தினந்தோறும் காலை மாலைகளில் நடக்கும் தோமால ஸேவைகளில் (திருவாராதன காலங்களில்) திருவேங்கடமுடையான் அருளிச்செயல் கேட்டருளுகிறார். காலைத் தோமால ஸேவையில் திருப்பள்ளியெழுச்சியும் திருப்பாவையும் எழுத்தெழுத்தாக எண்ணி ஸேவித்து அமுது செய்தவுடன் திருப்பாவை சாற்றுமுறை செய்யப்படுகிறது. மாலைத்தோமால ஸேவையில் திருப்பல்லாண்டு பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு விண்ணீல மேலாப்பு, ஊனேறு செல்வத்து, தாயேதந்தை, வாடமருதிடை, கங்குலும் பகலும், ஆழியெழ, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்கிற பதினைந்து பதிகங்கள் ஸேவித்து உடனே சாத்துமுறையாகும், இத்திருவாராதன காலங்களில் பெரிய ஜீயர் அல்லது சிறிய ஜீயர் அல்லது ஏகாங்கிஸ்ரீவைஷ்ணவர் திருத்துழாயை அர்ச்சகரிடத்தில் கொடுத்து, 'ஸாதித்தருள ஸ்ரீசைலேசதயாபாத்ர'மென்று தொடங்கி விட்டு அருளிச் செயல் ஸேவித்துக்கொண்டே பெருமாளுக்குத் திருவால வட்டம் ஸமர்ப்பித்துக்கொண்டிருப்பர். சாத்துமுறையாகும் போது அர்ச்சகர் ஜீயர் ஸ்வாமி கொடுத்த திருத்துழாயைப் பெருமாள் திருவடிகளில் சேர்த்துக் கொண்டிருப்பர். இப்படி மூலவர் உத்ஸவர்களிடம் நடக்கும் எல்லாச் சாத்துமுறைக் காலங்களிலும் அந்தந்த மூர்த்திகளின் திருவடிகளில் திருத்துழாயை ஸமர்ப்பிக்கும்முறை நடந்து வருகிறது. சாத்துமுறையில் கடைசியில் பல்லாண்டு - ஸர்வதேச - தசாகாலேஷு........மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும் ஸேவித்து முடிந்தவுடன் கோஷ்டிக்குத் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் ப்ரஸாதங்கள் யதோசிதம் வினியோகிக்கப்படும்.

தோட - மால (தோட்ட மாலை) அல்லது தோள் மாலை என்பது தோமாலை என்றாயிற்றென்பர் திருமலைக்குப் புஷ்ப மண்டபமென்று ப்ரஸித்தியுள்ளதனாலும் திருவாராதனத்தின் கடைசியில் புஷ்பமாலை ஸமர்ப்பிப்பதனாலும் திருவாராதன ஸமயத்தைத்தோமால ஸேவை என்று முன்னோர் குறித்திருக்கலாம்.

வியாழக்கிழமைகள் தோறும் நடக்கும் பூலங்கித் தோமால ஸேவையில் வாடமருதிடைபோகிக்கு முன்பாக ஊன்வாடவுண்ணாதென்னும் திருமொழி யநுஸந்தானமு முண்டு. வெள்ளிக்கிழமைகள் தோறும் மூலவருக்குத் திருமஞ்சன காலத்தில் வெண்ணெயளைந்த, பின்னைமணாளனை என்ற இரண்டு பதிகங்களும் திருமஞ்சனமானவுடன் நாச்சியார் திருமொழியும், பிறகு நடக்கும் தோமால ஸேவையில் சிறிய திருமடலும் ஸேவித்து, அமுது செய்தவுடன் நாச்சியார் திருமொழி சாத்துமுறை

பாரத்துவாசன்

செய்யப்படும். வெள்ளிக் கிழமைகளில் மூன்று தோமால ஸேவைகள் நடைபெறும்.

ஒவ்வொரு நாளும் உத்ஸவருக்கு நடக்கும் திருக்கல்யாணோத்ஸவத்தில் தேங்காயுருட்டும் போது வாரணமாயிரம் அநுஸந்திக்கப்படும்.

ஆண்டு முழுதும் காலையில் திருக்காப்பு நீக்கும் போது திருப்பள்ளியெழுச்சியே அநுஸந்திக்கப்பட்டு வந்ததென்றும், மணவாள மாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளியபோது தம்முடனிருந்த ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவுக்கு நியமிக்க, அண்ணா ஸுப்ரபாதம் ஸ்தோத்திரம் ப்ரபத்தி மங்களமென்னும் நான்கு துதிகளை விண்ணப்பிக்க, அதற்கு மனமகிழ்ந்த மாமுனிகள் — மார்கழி மாதத்தில் மட்டும் திருப்பள்ளியெழுச்சியையும், மற்ற மாதங்களில் இந்நான்கு துதிநூல்களையும் திருக்காப்பு நீக்கும் போது அநுஸந்திக்குமாறு நியமித்தாரென்றும் பெரியோர் பணிப்பர்.

திருக்கார்த்திகைத் தீபாராதனத்தின் போது திருவேங்கடமுடையான் மூலவரிடத்தில் வையந்தகளியா, அன்பேதகளியா, திருக்கண்டேன் என்ற மூன்று பாசுரங்களை ஜீயர் ஸ்வாமி முதலியோர் அநுஸந்திக்கையில் மூன்று ஹாரத்திகள் நடைபெறும். திருமாலைத் திருவிளக்கேற்றிக் கண்ட முதலாழ்வார்களின் பாசுரங்கள், 'செந்தமிழ் பாடுவார் (= முதலாழ்வார்கள்) தாம் வணங்கும் தேவர்' என்று கலியனால் சிறப்பிக்கப்பட்ட திருவேங்கடமுடையானுக்கு நடக்கும் தீபாராதனத்தில் அனுஸந்திப்பது அத்யந்தம் உசிதமன்றோ?

மார்கழி மாதத்தில் பின் மாலை திருக்காப்பு நீக்கும் போது திருப்பள்ளியெழுச்சி, பின்பு தநுர்மாஸத் தோமால ஸேவையில் உபதேசரத்தினமாலை, மாலைத்தோமால ஸேவையில் திருவாய்மொழி நூற்றந்தாதி ஆகியவை ஸேவிக்கப்படும். வெள்ளிக்கிழமைகளில் திருமஞ்சனமானவுடன் நாச்சியார் திருமொழியும் தோமாலஸேவையில் சிறிய திருமடலும் அநுஸந்திப்பதில்லை. தோமால ஸேவையில் உபதேசரத்தினமாலை ஸேவித்து அமுது செய்தவுடன் சாத்துமுறை செய்யப்படும். மார்கழி மாதத்தில் அனத்யயனம் நீங்கி விட்டாலும் பின்மாலை திருப்பாவை ஸேவித்து விட்டபடியால் காலைத் தோமால ஸேவையில் உபதேசரத்தினமாலையே ஸேவிக்கப்படும். மாலைத் தோமாலஸேவையில் மற்ற மாதங்களிற் போலவே நித்யாநுஸந்தானமே ஸேவிக்கப்படும்.

கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகைக்குப் பிறகு காலை மாலைத் தோமாலஸேவையில் முற்கூறியபடி உபதேசரத்தினமாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் முறையே ஸேவிக்கப்படும்.

ஒவ்வொரு திருவோணத்தின் போதும் மாலையில் திருமலையப்பன் புறப்பாட்டில் முதல் திருவந்தாதி ஸேவித்து வந்து, பெருமாள் கோபுர வாசலுக்குள் எழுந்தருளும் போது சாத்துமுறை. பல்லாண்டும் வாழித் திருநாம முண்டு. ரோஹிணியில் கண்ணன் புறப்பாட்டில் பெரியாழ்வார் திருமொழியும், புநர்வஸுவில் சக்ரவர்த்தி திருமகன் புறப்பாட்டில் பெருமாள்திருமொழியும் ஸேவித்து முன்பு போலவே கோபுரவாசலுக்குள் சாத்துமுறை செய்யப்படும். திருவாதிரை தோறும் எம்பெருமானார் திருமலையப்பனுடன் புறப்பட்டுத் திருவீதியெழுந்தருளும் போது இராமாநுச நூற்றந்தாதியை அநுஸந்தித்துக் கோபுர வாசலுக்குள் சாற்றுமுறை செய்யப்படும். அனத்யயன காலத்தில் இவ்வெல்லாப் புறப்பாடுகளிலும் உபதேசரத்தினமாலை ஸேவிக்கப்படும்.

அழகிய சிங்கர் மேயான் வேங்கடம் வராகப்பெருமாள் சேனைமுதலியார் ஆகியவர்களின் வருஷத் திருநக்ஷத்திரத்தின் போது திருப்பல்லாண்டு, கண்ணிநுண் சிறுத்தாம்பு கோயில் திருவாய்மொழி, இராமாநுச நூற்றந்தாதி, உபதேசரத்தினமாலை ஆகியவை ஸேவித்துச் சாத்துமுறை செய்யப்படும். ஸ்ரீ ஜயந்தியன்று இரவில் உகர ஸ்ரீநிவாஸமூர்த்திக்கு நடக்கும் த்வாதசாராதனத்திலும், திருமலையப்பனுடைய வஸந்தோத்ஸவத்தின் மூன்றும் நாளிலும் வராகப் பெருமாளுடைய அத்யயனோத்ஸவத்திலும், திருமலையெம்பெருமானார் ஸந்நிதியில் நடைபெறும் மணவாளமாமுனிகள் சாத்துமுறையிலும் முன்பு போலவே ஸேவை சாத்துமுறைகள் நடக்கும்.

ஸ்ரீஜயந்தியன்று இரவில் கண்ணனுக்குத் திருமஞ்சனமானவுடன் பெரியாழ்வார் திருமொழி ஸேவை சாத்துமுறைகள் நடைபெறும்.

மூன்று நாட்கள் நடக்கும் திருப்பவித்ரோத்ஸவத்தின் போது திருமலையப்பனுடைய மாலைப் புறப்பாட்டில் முறையே முதல் மூன்று திருவந்தாதிகள் ஸேவித்துச் சாத்துமுறை செய்யப்படும். ஹோமம் நடக்கும் போது திருவாய்மொழி ஸேவை உண்டு.

## ப்ரஹ்மோத்ஸவம்

புரட்டாசி மாதத்தில் நடைபெறுகிற திருவேங்கடமுடையானுடைய ப்ரஹ்மோத்ஸவத்தின் முதல் நாள் காலை த்வஜாரோஹணத்திற்காக நடக்கும் தோளுக்கினியான் புறப்பாட்டில் இயல் கோஷ்டியில்லை. இரவு சேஷவாகனத்தில் முதல் திருவந்தாதி. இரண்டாம் நாள் காலை சிறிய சேஷவாகனத்திலும் இரவு ஹம்ஸ வாகனத்திலும் இரண்டாந்திருவந்தாதி. மூன்றும் நாள் காலை ஸிம்ம வாகனத்திலும் இரவு முத்துப்பந்தலிலும் (சப்பரம்) மூன்றுந் திருவந்தாதி. நான்காம் நாள் காலை கற்பக விருக்ஷத்திலும் இரவு ஸர்வ பூபாலத்திலும் (விமானம்) நான்முகன் திருவந்தாதி. ஐந்தாம் நாள் காலை பல்லக்கில் நாச்சியார் திருக்கோலததிலும் இரவு பெரியதிருவடி வாகனத்திலும் திருவிருத்தம். ஆறும் நாள் காலை சிறிய திருவடியிலும் இரவு யானை வாகனத்திலும் பெரிய திருவந்தாதி. மாலையில் நடக்கும் வஸந்தோத்ஸவத்தில் இயல் இல்லை. இவ் வாறுநாட்களிலும் இயற்பாவிற்குப் பின்பு பெரியாழ்வார் திருமொழியை சிறிது சிறிதாக ஸேவித்து முடிப்பர்கள். ஏழாம்நாள் காலை ஸூர்யப்ரபையிலும் இரவு சந்த்ர ப்ரபையிலும் எட்டாம் நாள் காலை திருத்தேரிலும் பெரிய திருமொழி ஸேவித்துத் திருத்தேர் நிலை சேர்ந்தவுடன் பெரியாழ்வார் திருமொழியும் பெரிய திருமொழியும் சாத்துமுறை செய்யப்படுகிறது. திருவாசிரியம் திருவெழுகூற்றிருக்கை சிறிய திருமடல் பெரிய திருமடல் ஆகியவற்றையும் திருத்

தேர்ப் புறப்பாட்டிலேயே ஸேவித்து முடிப்பர்கள். எட்டாம் நாள் இரவு குதிரை வாகனத்தில் நாச்சியார் திருமொழி. ஒன்பதாம் நாள் காலையில் பல்லக்குப் புறப்பாட்டில் பெருமாள் திருமொழியும் உள்ளே யெழுந்தருளியவுடன் சூர்ணாபிஷேகத்தில் திருச்சந்தவிருத்தம் முதலாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு ஈறாகவுள்ள ப்ரபந்தங்களும் திருக்குறுந்தாண்டகமும் ஸேவித்து தீர்த்த வாரிக்காக ஸ்வாமி புஷ்கரிணிக்கெழுந்தருளும் போது திருநெடுந்தாண்டகம் சேவித்து நிறுத்தப்படும். ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீ வராகப் பெருமாள் ஸந்நிதி வாசலில் உபயநாச்சியாருடன் திருமலையப்பனுக்கும் சக்ரத்தாழ்வாருக்கும் அலங்காரத் திருமஞ்சனமாகிச் சக்ரத்தாழ்வார் தீர்த்தம் ஸாதித்தவுடன் திருவாராதனத்தில் திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை திருப்பல்லாண்டு கண்ணிநுண் சிறுத்தாமபு கோயில் திருவாய்மொழி இராமானுச நூற்றந்தாதி உபதேசரத்தின மாலை ஸேவித்துச் சாத்துமுறை செய்யப்படும். திருப்பாவைக்கும் திருவாய்மொழிக்கும் நடுவில் திருநெடுந்தாண்டகச் சாத்துப் பாட்டுக்களும் ஸேவிக்கப்படும். எட்டாம் நாள் திருத்தேரடியிலும் ஒன்பதாம் நாள் வராகப் பெருமாள் ஸந்நிதி வாசலிலும் சாத்துமுறையில் இயற்சாத்தும் (நன்றும்......மலர்ந்த பூவே) வாழித் திருநாமமும் ஸேவிக்கப்படும். ஒன்பதாம் நாளிரவு த்வஜாவரோஹணப் புறப்பாட்டில் இராமானுச நூற்றந்தாதி. பத்தாம் நாள் த்வாதசாராதனமும் திருவாய்மொழியாயிர ஸேவையும் நடந்ததாகத் திருமலையொழுகில் காணப்படுகின்றது. ஆனால் அது அன்று நடவாமல் அடுத்த வருஷம் ஸ்ரீ ஜயந்தியன்று உக்ரமூர்த்திக்கு நடக்கின்றது. கோயில் திருவாய்மொழி தான் ஸேவிக்கப்படுகிறது. இதற்குக் காரணம் தெரியவில்லை. எட்டு ஒன்பதாம் நாட்களில் காலை வேளைகள் நீங்கலாக மற்ற நாட்களில் எல்லாம் வாகனத்திலிருந்து படிகளை கோயிலுக்கு எழுந்தருளும் போது கோபுர வாசலுக்குள் சாத்துமுறையும், எம்பெருமானார்ஸந்நிதியில் இயற்சாத்து வாழிகளும் ஸேவிக்கப்படும். கோவில் வாசலில் நடக்கும் திருவந்திக் காப்பின் போது திருமலையப்பன் அமுது செய்யும் இயற்படியென்றே வழங்கப்படுகிற தோசைப்படி எம்பெருமானார்க்கு அமுது செய்விக்கப்பட்டு இயற்சாத்தின் போது விநியோகிக்கப்படும் திருப்பவித்ரோத்ஸவத்தில் மூன்று நாட்களிலும் எம்பெருமானார் திருமுன்பாக இயற்சாத்தும் விநியோகமும் நடக்கும். இரண்டு மூன்று வருடங்களுக்கு ஒருமுறை தனியாக நடக்கும் நவராத்ரி ப்ரஹ்மோத்ஸவத்திலும் முற்கூறியபடியே ஸேவை சாத்து முறைகளும் இயற்படியும் இயற்சாத்தும் நடைபெறும்.

ப்ரஹ்மோத்ஸவங்களில் திருவேங்கடமுடையான் திருநக்ஷத்திரமாய்த் தீர்த்தவாரி நாளான ச்ரவணத்தினன்று இரவுப் புறப்பாட்டில் இராமாநுச நூற்றந்தாதிச் சாத்து முறையானவுடன் பெருமாள் கருட மண்டபத்தில் த்வாரபாலகரின் ஸமீபத்தில் வடக்குமுகமாக எம்பெருமானாரைக் கடாக்ஷித்துக் கொண்டே எழுந்தருளியிருந்து அமுது செய்து ஆஸ்தானம் கண்டருளுவர். ஒவ்வொரு மாதத் திருநக்ஷத்ரமான திருவோணத்தில் கிழக்கு முகமாகக் கருடனைக் கடாக்ஷித்துக் கொண்டு ஆஸ்தானம் கண்டருளும் திருமலையப்பன் ப்ரஹ்மோத்ஸவத் திருவோணத்தில் மட்டும் வடக்கு முகமாக எழுந்தருளி எம்பெருமானாருக்கு ஸேவை ஸாதிப்பதை, ப்ரஹ்மோத்ஸவத்தை நன்றாக நடத்தி வைத்ததற்காகத் திருமலையப்பன் எம்பெருமானார்க்கு உபய நாச்சியார்களுடன் தன்னை முற்றூட்டாக அனுபவிப்பிக்கும் ஸர்வஸ்வ தானமென்று பெரியோர் அருளிச் செய்வர்.

(தொடரும்)



காரமடை ஸ்ரீ ரங்கநாதர் கோயில் சிற்பம்.
திரு. எஸ். ஜி. சேஷகிரி—கோவை.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசாரியார்

**ஆகமம் என்ற சொல் பொருள் சிறு விளக்கம் என்ன?**

மொழிகள் இலக்கிய மொழி, வழக்கு மொழி என இருவகைப்படும். இவைகளின் இலக்கிய மொழி இலக்கண வரம்பிற்கு உட்பட்டு, அதிகம் மாறுதல் பெறுமல் இருக்கும். வழக்கு மொழியோ மாறும் இயல்புள்ளது. உதாரணமாக - ஹிம்ஸை புரியும் கொடிய விலங்குகளைப் பொதுவாகக் குறிக்கும் ''ஹிம்ஸ:'' என்ற சொல் சொல்மாற்றம் பொருள் மாற்றம் பெற்று சிங்கத்தை மட்டும் குறிக்கும் ''ஸிம்ஹ:'' என மாறிற்று. தசை, சிவிறி என்ற சொற்கள் நாடடைவில் வழக்கில் சதை, விசிறி என மாறின. இவைகளைப் போன்றே மானுக்கும் மட்டும் பெயரான ''ம்ருக:'' என்ற சொல் நாளடைவில் விலங்குகள் அனைத்தையும் குறிக்கும் சொல்லாகவும், மற்று எள்+நெய்=எண்ணெ என்ற சொல் எண்ணெ அனைத்தையும் குறிக்கும் சொல்லாகவும் மாறியது. இவ்வகையில் 'ஆகமம்' என்பது தொடர்ந்துவரும் நல்லறிவு என்ற பொதுப்படைக் கருத்துள்ள சொல் ஒரு குறிப்பிட்ட, தத்துவ விளக்க நூலை மட்டும் குறிப்பாக விளக்குகிறது. ஆகமம் நிகமம் என்ற சொற்கள், ஒரு இரட்டை சொல். இரட்டை என்றுல் த்வந்த்வம் எனப்பெயர். இன்பம்+துன்பம், லாபம்+நஷ்டம், இரவு+பகல், ஆண்+பெண், இவைகளே ''த்வந்த்வம்'' ஆகும். இந்த த்வந்த்வம் இதில் பற்றுற்றவனது வாழ்வை, வேரைக் கரையான் போல் அடியோடு அழிந்து விடுகிறது. அதனுல்தான் கண்ணன் அர்ஜுனனிடம் ''அர்ஜுனு! இந்தத் த்வந்த்வத்திலிருந்து என்றும் ஒதுங்கி இரு'' என்ருர். நிகமம் என்ருல் பகவானுடைய மூச்சுக்காற்றுகள் என்று வேதம் உரைத்தபடி வேதங்களைக் குறிக்கும். ஆகமம் என்ருல் பகவானுலே தம் திருப்பவளச் செவ்வாயிலிருந்து வெளியிடப்பட்ட சிற்பம், மந்த்ரம், தந்த்ரம் என்ற மூன்று தத்துவப் பொருளைச் சேர்த்து விளக்கும் நூலைக் குறிக்கும். நம் உடம்புக்குள் 5 வகைக்காற்றுகள் உள்ளன. அவைகளில் - ஸமானம் ''உதானம்'' என்ற இரண்டு காற்றுகளால்தான் மொழிகள் வெளிப்படுகின்றன. மற்றும் மொழிகளை வெளிப்படுத்தும் காற்றே நம் உடலுக்குள் பரா, பச்யந்தி, மத்யமா என்ற மூன்று பெயருடன் உள்ளே நிலை பெற்றுக் கடைசியில் 'வைகரீ' என்ற நிலையில் காற்றுடன் வெளி வருகிறது இதில் ஸமானம் என்ற காற்றிஞல் தோன்றியது ஆகமம் ஆகும். உதானம் என்ற காற்றிஞல் தோன்றியது நிகமம் ஆகும். ஆக பகவானுடைய மூச்சுக் காற்று வேதம், வாய்க்காற்று ஆகமம் ஆகும். இந்த ஆகமங்களுக்கு வேதமோடு ஒக்கப் பிரமாணம் கூறப்படும். ஒரு படி மேலே நின்று கூறினுல் வேதக் கருத்துக்களை தர்மசாஸ்திரங்கள் போல் ஆகமம் மக்களுக்குப் புரியும் படியும், எளிய மொழியில் ஐயம், திரிபு, மயக்கம் முதலிய அன்றியும் வெளியிட்டால் வழக்கில் இந்த ஆகமங்களுக்கு ஒரு தனிச்சிறப்பும் ஏற்படும். ''பகவந்முக நாஸாப்யாம் ஆகமோ நிகமஸ் ததா! நிஸ்ஸ்ருதௌ யென தஸ்மாத்து ப்ரமாணேபி ஸமௌ மதௌ!! என நூல்வாக்கு. ''செய்வன திருந்தச் செய்'' என்ற நீதிவாக்கியப் படிக்கு எதையும் முறைப்படிப் பழுதின்றிச் செய்தால்தான் பலன் கிட்டும். இறைவனுக்குப் பூஜை செய்வதும் வழிபடுவதும் நம்மளவில் முறைப்படியேதான் அமைய வேண்டும். எம பெருமான் உள்ளம் பார்ப்பவன்—என்ற உண்மை கொண்டும், பகவானே ''யோமே பக்த்யா ப்ரயச்சதி'' என்று கூறியிருக்கிருர் எனக்கொண்டும் நினைத்த படிக்குப் பூஜை செய்யக் கூடாது. நெறி நன்ருக இருந்தால்தான் குறி நன்கு இருக்கும். எவ்வளவு திறமையுள்ள டாக்டர் தந்த நல்ல மருந்தானுலும், அதைப் பத்திய முறைப்படிப் பயன்படுத்தினுல்தான் நோய் போகும். அதனுல்தான் ஆழ்வாரும் 'வழுவிலா அடிமை' என்றும, 'பொன்னடிக் கடவாதே வழிவருகின்ற அடியோர்'' எனவும் அருளிச் செய்தார். உணவிலும் கூட பால் சுருக்கி, நெய் உருக்கி, மோர் பெருக்கி, நீர் மருக்கி, பசி நெருக்கி உண்பது நலம் எனவும். 'திவாச்லாக்யம் ததி ஸ்தோகம், ச்லாக்யம் நக்தம் பயோதிகம்' பகலில் தயிரும் இரவில் பாலும் பருகவேணடும் என்றும் வைத்யமுறை கூறுகிறது. இப்படி இருக்க உள்ளம் தூய்மையாக இருந்தால் போதும் இந்த மாதிரி ஆகமம் நெறி என்பதெல்லாம் ஏமாற்றம் என விதண்டாவாதம் செய்யாமல் இறைவனுக்குச் செய்யும் பூஜைகளில் ஒரு முறையைத்தான் பின்பற்ற வேண்டும். அம்முறை வேதங்களில் வகுத்த முறைக்கே சிறப்பு அதிகம். அம்முறையையே ஆகமங்கள் வகுத்தும் விளக்கியும் உரைக்கும். மந்த்ரம், தந்த்ரம், சில்பம் எனற மூன்று பகுதிகள் முறைப்படி விளக்கப்படும் நூலே ஆகமமாகும். சில்பம் என்ருல் த்யானம் எனபவும் பொருள். அச்சில்பம் ஆகமத்தில் ஒரு கண்ணுக அமைந்திருக்கும். ஆகம முறைப்படிப் பூஜை நடத்துவதில் இதற்குப் பின இது செய்யபபட வேண்டும் என்ற க்ரம முறை சிறிது தவறினுலும் பயன கிடையாது. கோவில் கடவுள் பூஜை முறைகள் என்பவற்றை ஏதோ ஒரு காட்சி நிலையம் எனக் கருதி நம்முடைய புதுக்கருத்தை இங்கும் புகுத்தக் கூடாது. கஷ்டப்படும் மககள் தங்கள் கஷ்டம் போகவும், நன்ருக இருக்கும் மக்கள், நமக்குக் கஷ்டங்கள் வராமல் இருக்கவும், அருள் பெறத்தானே கோயில் வழிபாடு வீட்டு வழிபாடு என்பவைகளைத் தாங்களே செய்கிருர்கள். கோயில் இருக்கும் பிம்பங்களில் சக்தி புகுத்தப்பட்டிருந்தால்தானே அவர்கள் கோரிக்கை நிறைவேறும். அந்த சக்தியைப் போக்கி அங்குச் சென்று வழிபடுவதில் பயனே கிடையாது. இத்தகைய அச்சக்தி அங்கு நிலைத்திருப்ப

தற்கு வழிவகுத்துச் சொல்வதே ஆகமங்கள். ஆகம முறைகளைப் பிற்போக்குக் கருத்துக்கள் என்று முற்போக்கு நோக்கம் இவைகளில் கொண்டால் கோவில் விக்கிரகங்கள் காட்சிப் பொருளாக ஆகி விடும். அதனால் மனிதர்களின் நலனும் நாட்டின் நலனும் நிச்சயம் பறிக்கப்படும். ஆலயங்கள் என்பது மெய்யறிவு நலனும் உடல் நலனும் பேணநம் பெரியோர்கள் கள் ஏற்படுத்திய ஒரு ஆன்ம சக்தி நிலையம் (Spiritual power station) உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானிகளும் வியந்து நிற்கும் படியாக அமைக்கப்பட்ட ஆலயங்களையும், ஆலயமூர்த்தங்களையும், சிற்பங்களையும் நம் சிற்றறிவுகொண்டும் சுயநலம் கொண்டும் பழையபடிக் கே பாதுகாக்காமல் விட்டு விட்டால் உண்மையில் நம் பாரதம் பண்பாட்டின் சிறப்பின் சிகரம் சிதைந்து விடும். அரசாங்கமும் மக்களும் இக்கலைப் பொக்கிஷத்தில் தெய்வ சக்தியை நித்தியப் படிப்பூஜை, வேத பாராயணம், முறைப்படி ஆராதனம், நாள்தோறும ஆழ்வார்களின் அருளிச் செயல்கள், நாயன்மார்களின் அருள்வாக்குகளை ஓதுவது, வருஷா வருஷம் பூஜைகளில் அறியாமல் ஏற்பட்ட குறைபாடுகளை நிறைபடுத்துவது முதலியற்றிற்காகப் பவித்ரோத்ஸவம் என்ற துவாதசாராதனம், தவறாமல் 12 ஆண்டுகளுக்கு ஒரு தடவை ஆலயத்திருப்பணி செய்து, சம்ப்ரோக்ஷணம் செய்தல், தேர் வடம் பிடித்து இழுப்பது, தெப்ப உத்ஸவம் தவறாமல் நடத்தல, ஏழை எளியவர்கள் அனாதைகளுக்குப் பொதுமக்கள் சார்பில் உணவளித்தல் மக்களிடையே தலம் பற்றியதும் பொதுவாகசமயம்பற்றியும்விளக்கவகுப்புக்கள் நடத்தல் முதலியன செய்து வந்தால் நிச்சயம் பழைய ராமராஜ்யத்தை இன்றும் காணலாம். இதனால் நாடு செழிக்கும், மக்கள் பயமின்றி நிம்மதியாகவும் வாழ்வார்கள். நம் பெரியோர்கள் ஆலயங்களில்மரம், குறிப்பிட்ட சில தாமிரம், பஞ்சலோகம் இவைகளில் மந்திர சக்தியை ஏற்றி கடவுளைப் ப்ரதிஷ்டை செய்து வைத்து மக்கள் நாடு இவைகளின் நலத்துக்காக ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்கள். வேதமும் "அதோயத்தாருப்லவதே அல்பஸ்யபாரே" என்ற மந்திரங்களால் ஆலய வழிபாட்டை வலியுறுத்தியது மட்டுமின்றி இவ்வாறு வழிபாடாதவரை 'துர் ஹணு!' எனவும் வேதம் இகழ்கிறது. இத்தகைய சீரிய பண்பாட்டைப் புதுமை வேண்டுமென்ற எண்ணத்தால் மாற்றவும் கூடாது. அதனால் நாட்டின் சிறப்பு அழியும். "இதனை இதனாலிவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண்விடல்" என்ற திருக்குறளின் ஆழ்கருத்தைப் படித்தறிந்தால் மேலே குறிப்பிடப்பட்ட அனைத்துக் கருத்துக்களும் சாலப் பொருந்தியிருக்கும்.

(தொடரும்)

---

## மதிப்புரை

# ஸ்ரீமத் பகவத் கீதை

பகவத் கீதை இறைவனால் பாடப்பட்டது என்னும் பொருளது; அத்துவிதத்திற்குத் தலைசிறந்த நூலாய்ப் போற்றப்படுவது. போர்க்களத்தில் கண்ணன் அருச்சுனனுக்கு அறிவுறுத்திய மாபெருங் கருத்துகளைக் கொண்டதே கீதை. பகவானால் சொல்லப்பட்டமையின் பகவத் கீதை எனப்பட்டது.

வடமொழிச் சுலோகங்களாலான பகவத் கீதையைத் தமிழ் உரைநடையில் எழுதியவர் பலர் சிலர் செய்யுள் வடிவிலும் இதனை மொழி பெயர்த்துள்ளனர். திரு ஈ. இரத்தின சுவாமி (துளசிராம்) அவர்கள் இனிய செய்யுள் வடிவில் தமிழாக்கம் செய்துள்ளார். இவருடைய தமிழாக்கம் சுலோக வடிவில் அமைந்து மூலத்தின் கருத்தை அழகுபட விளக்கிச் செல்கின்றது.

தியான சுலோகத்தில், போர்க்களத்தில் துரியோதனன் பக்கல் நின்றவர்களை அழகாக உருவகஞ் செய்து போர்க்களமாம் குருச்சேத்திரத்தில் பாண்டவர் தாண்டியே கரை சேரத் தெப்பமாய் நின்ற கேசவனை வணக்கம் எனத் தொடங்கும் முறை, உள்ளத்தை ஈர்ப்பதாய் உள்ளது. பாரதப் போராம் பேராற்றில் பீஷ்மர் துரோணர் இருகரையாகவும் சயத்திரதன் ஆற்று நீராகவும் சல்லியன் கொடிய சுறாவாகவும் அசுவத்தாமனும் விகர்ணனும் மகர மீன்களாகவும் துர்யோதனன் நீர்ச் சுழலாகவும் கர்ணன் நதியின் பேரலையாகவும் விளங்குகின்றனர் எனத் தமிழாக்க ஆசிரியர் உருவகம் செய்துள்ளமை அழகாக உள்ளது.

சாங்கிய யோகத்தில் பகவான் அர்ச்சுனனுக்குப் பிரம நிலையை உணர்த்தி, இந்நிலையைப் பெற்றோர் அழியாப் பிரமநிலை எய்துவர் என்று அறிவு கொளுத்துகிறார். "நீயும் நானும் இங்குள மன்னரும் என்றுமே அழியாதவர்கள். குழவிப் பருவமும் இளமையும் மூப்பும் தோன்றுதல் போலே மறுபிறப்புண்டாகும். ஆத்மா என்றும் அழியாதது. இன்ப துன்பம் குளிர் வெப்பம் ஆகியவை புறப்பொருள் தீண்டுதலால் வருவன. தோன்றி மறைவதும் நிலையாத் தன்மையும் அவற்றின் இயல்பு. இவற்றால் வரும் துயரம் நீங்கி உண்மை உணர்ந்து தன்னை ஆள்பவன் எவனோ அவனே ஞானி, அவனே வீரன். அவனே அழியா நிலையுற்றோன்" இக்கருத்துகளை மொழி பெயர்ப்பாசிரியர் அழகிய செய்யுளில் புலப்படுத்தியுள்ளார்.

ஞானயோகம், கர்மத்தளையை வெல்லும் வழியைக் கூறுகின்றது. எவன் வினையில் பயனை வேண்டாமல் இருக்கின்றானோ அவனே வினையின் கட்டை வென்றோனாவான். கிட்டும் பொருளால் மனம் நிறைவுற்று வெற்றி தோல்விகளில் சமநிலையுற்றோன் யாரோ அவன், செய்யும் வினையால் கட்டுண்ணான். வினை செயல் வேள்வி, வினை செயல் கடன் என்றெண்ணிச் செயலாற்றுவோனை வினையால் வரும் பயன்கள் பற்ற மாட்டா. இக்கருத்துக்களை மொழி பெயர்ப்பாசிரியர் இன்னோசை அமையச் செய்யுளில் அமைத்துள்ளார்.

விசுவரூப தரிசனம், உலகமெல்லாம் தன்னுள் அடங்கியிருப்பதைக் கண்ணன் அர்ச்சுனனுக்குத் தெளியக் காட்டுவதை விளக்குகிறது.

"பாண்டவன் அங்கே தேவ தேவனின்
உடலில் உலகம் அனைத்துமே
பலவாய் ஆனதை ஒன்றாய்ச்சேர்ந்து
விளங்கக் கண்டான் அப்போதே"

என்னும் பாடலின் வாயிலாக விசுவ ரூப தரிசனம் பெற்று மகிழ்ந்த ஆசிரியர் நன்கு தெளிவுபடுத்தியுள்ளார்.

முக்குண நிலை, சத்துவ குணம், ராசதகுணம், தமோகுணம் என்னும் மூன்று குணத்தின் இயல்புகளையும் விளக்குகின்றது. முக்குணமல்லால் செயலுக்கு முதலாவது வேறொன்றில்லை என்று அறிபவனே குணத்திற்கு அப்பாற்பட்ட பரம்பொருளின் உண்மையைக் காண்கின்றான். அவனே பரப்பிரமமாகிய பரம்பொருளைக் கண்டு அதனை அடைகின்றான்.

"முக்குணத் தாலாம் உடலையெடுத்தோன்
குணத்தைத் தாண்டி அப்பாலாம
பிறப்பு இறப்பு மூப்பு துன்பம்
இல்லாப் பேற்றை எய்திடுவான்"

என்று மொழி பெயர்ப்பாசிரியர் அழகுபடக் கூறுகின்றார்.

மொழி பெயர்ப்பாசிரியர் மூலத்தில் கருத்தைத் தெளிவாகத் தம் தமிழாக்கத்தில் புலப்படுத்தியுள்ளார். இவருடைய செய்யுட்கள் இன்னோசையுடன் அமைந்து இவருடைய புலமைத்திறத்திற்கு எடுத்துக்காட்டாய் விளங்குகின்றன. தமிழாக்கம் செய்த இவ்வாசிரியர் அத்தியாயத்தின் தலைப்புகளையும் தூய தமிழில் மொழி பெயர்த்திருக்கலாம்.

சுவாமி விவேகானந்தர் பகவத் கீதையில் பெரிய ஈடுபாடு கொண்டவர். பகவத்கீதை விளக்கிய அத்துவிதக் கருத்துக்களை உலகெங்கணும் பரப்பிய மாவீரர். பயன்கருதாமல் தொண்டாற்றிய பேரறிஞர் அவருடைய பெயரால் விளங்கும் விவேகானந்த கேந்திரம், பகவத் கீதையை தமிழாக்கம் செய்து வெளியிட்டிருப்பது பெரிதும் போற்றத்தக்கது அவர்களுடைய முயற்சி நாட்டிற்குப் பெரியதோர் ஆன்மீக உணர்வை ஊட்டும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவர்கள் தொண்டு வேலை மேலும் சிறந்தோங்குவதாக.

நூற் பெயர் : ஸ்ரீ மத் பகவத் கீதை: ஆசிரியர் : சு. ரெத்தின சுவாமி. வெளியிடுவோர் : விவேகானந்த கேந்திரம், விவேகானந்தபுரம், கன்னியாகுமரி. விலை : ரூ. 3-00. பக்கங்கள் : 196.

டாக்டர் நா. பாலுசாமி—தஞ்சை-5.

# ஸ்ரீ ராகவேந்திரசுவாமிகள் வரலாறு

நூலின் பெயர் : ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் வரலாறு, ஆசிரியர்: J. S. தட்சிணாமூர்த்தி B. A., தமிழாக்கம்: M. S. திருமலை சர்மா, பிரசுரிப்போர்: M. P. மிஞ்சப்பா புத்தகவியாபாரம் ஆதோனி - 518301, விலை: ரூபாய் நான்கு, பக்கங்கள்; 72.

1. ஆந்திர பிரதேசத்திலுள்ள கர்னூல் ஜில்லா எம்மிகனூர் தாலுக்காவில் துங்கபத்திரை நதியின் கரையில் "மந்திராலய மகா க்ஷேத்திரம்" அமைந்துள்ளது. சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் துவைத மதத்தின் பீடாதிபதியான தவத்திரு ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் அங்கு பூத உடலுடன் (உயிருடன்) பிருந்தாவனத்தில் (ஜீவ சமாதியில்) பிரவேசித்தார். இவர் பிருந்தாவனத்தில் யோக சமாதியில் அமர்ந்து கொண்டு இன்று பக்தர்களுக்குத் தங்கள் கோரிக்கைகளைத் தீர்த்து, கற்பகத்தரு காமதேனு என்னும் விருதைப்பெற்று அழியாப் புகழுடன் விளங்குகின்றார்.

2. இந்நூலில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளின் பூர்வ ஆசிரம வாழ்க்கை வரலாறுகளும், அவர் நிகழ்த்திய அதியற்புத சித்துக்களும, அவர் ஜீவ சமாதி அடைந்த பிறகு அங்கு தரிசிக்க வரும் பக்தர்களின் கோரிக்கைகள் எவ்வாறு பூர்த்தி செய்விக்கப்படுகின்றன என்பதும் விளக்கப்பட்டுள்ளன.

3. தமிழ் நாட்டில் புவனகிரி அவருடைய பூர்வீகம். முன்னூறு ஆண்டுகளுக்கு முன் திம்மண்ண பட்டர்-கோபாம்பிகை தம்பதிகளுக்குத் திருவேங்கடவன் திருவருளால் "வேங்கடநாதன்" பிறந்தார். இதுதான் இவருடைய பிள்ளைத் திருநாமம். குருகுலவாசத்தில் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தார். சரஸ்வதி அம்மையாரை மணந்தார். அவர்களுக்கு லட்சுமி நாராயணன் என்ற மகன் பிறந்தான்.

4. அப்போது கும்பகோணத்தில் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் அவர்கள் ஸ்ரீ மாத்வ மத பீடத்தை அலங்கரித்து வந்தார். வேங்கட நாதன் அம்மடத்தில் சீடராகி, அவரிடம் வேதாந்த பாடத்தைக் கற்றறிந்தார். அவருக்குப் பின், வேங்கட நாதனே அம்மடத்தின் தலைவரானார். ராகவேந்திர யதீந்திரர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார். திக்விஜயம் செய்து கொண்டு மந்திராலயம் இருக்குமிடம் வந்து சேர்ந்தார்.

5. இந்த ராகவேந்திர யதீந்திரரின் பெருமை வருணனைக்கு அப்பாற்பட்டது. சுவாமிகள் கருணையுள்ளம் படைத்தவர். "என் பூதவுடல் நூறு ஆண்டுகள் மட்டும் இருக்கும்; என்னால் இயற்றப்பட்ட நூல்கள் முன்னூறு ஆண்டுகள் இருக்கக் கூடியவை, நான் பிருந்தா வனத்தில் சமாதி நிலையில் இருக்கக் கூடியது எழுநூறு ஆண்டுகள் ஆகும்" என்று அவரே கூறியுள்ளார்.

6. சென்னை பம்பாய் ரயில் பாதையில் "மந்திராலயம் ரோட்" என்னும் ஸ்டேஷன் உள்ளது. அங்கிருந்து ஒன்பது மைல் தூரத்திலுள்ள மந்திராலயம் க்ஷேத்திரத்திற்கு அதிக பஸ் வசதிகள் உள்ளன.

7. இந்த நூல் மிகச் சிறந்தமுறையில் அமைந்துள்ளது. எளிய இனிய நடையில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளின் வாழ்க்கை வரலாறுகளைச் சித்தரிக்கும் 6 படங்கள் நூலின் இடையிடையே சேர்க்கப்பட்டுள்ளன. சுவாமிகளின் அருள் நிறைந்த வண்ணப்படம் மேலட்டையை அலங்கரிக்கிறது. இது பலரும் படித்துப் பயன் பெறக்கூடிய சிறந்த நூலாகும். நூலின் இறுதியில் ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரம் இணைக்கப்பட்டுள்ளது.

வித்துவான் M. நாராயண வேலுப்பிள்ளை
காஞ்சிபுரம்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

